KALKI
10.11.96
ரூ. 3.00

# கல்கி

தீபாவளி சிறப்பிதழ் - 2



## பாலசந்தரோடு படம் பார்க்கும் அதிர்ஷ்டசாலிகள்!

## தி.மு.க.-த.மா.கா உரசல்?

"என்றாவது உலகின் நம்பர் ஒன் என்ற இடத்தை டென்னிஸ் விளையாட்டில் நான் அடைய வேண்டும். அதுதான் என் கனவு" என்று பலமுறை அவர் கூறியதுண்டு. ஆனால் தம் கனவு நிறைவேறாமலேயே டென்னிஸ் விளையாட்டிலிருந்து ஓய்வு பெற்றுவிட்டார் கேப்ரியலா சபாடினி. இவரது டென்னிஸ் சரித்திரத்தின் ஆரம்பக் காலத்தில் இவர் கனவை நனவாக்க முடியாமல் சுவர் போல குறுக்கே நின்றவர் மார்ட்டினா நவராத்திலோவா. சமீபகாலமாக அவருக்குக் கடும் தலைவலியாக விளங்கியவர்கள் ஸ்டெபி கிராஃபும், சான்சஸும்.



# கனவு நிறைவேறாமல்...

1991 தான் சபாடினியின் பொற்காலம். தொடர்ந்து ஐந்து பந்தயங்களில் ஸ்டெபியைத் தோற்கடித்தார். ஆனால் அதன் பின் அவர் சந்தித்தது சறுக்கல்களைத்தான்!

'எண்பதுகளில் ரேபான் கூலிங்கிளாஸுக்கு இவர் விளம்பர மாடலாக இருந்தார், சில வருடங்கள் கழித்து இவருக்குப் பெரும் தொகை கொடுத்து, தான் தயாரிக்கும் வாசனை திரவியத்துக்கு "சபாடினி" என்று பெயர் சூட்டி மகிழ்ந்தது ஓர் அமெரிக்க நிறுவனம்!

பல நாட்டு ஜனாதிபதிகளுடன் உணவருந்தியது, தமது நாடான அர்ஜென்டினாவில் விளையாட்டு ரசிகர்களைத் தம் கையில் முத்தம் தர அனுமதித்தது, "ஐ லவ் யு" கருத்துக் கணிப்பில் தொடர்ந்து முதலிடம் பெற்றது, பத்திரிகையாளர் கூட்டத்தில் அடிக்கடி இவர் சிந்தும் வெட்கப் புன்னகை- எல்லாமே பரபரப்பான தலைப்புச் செய்திகள் ஆயின.

டென்னிஸை பொறுத்தவரை இருவருக்கு நன்றிக்கடன் பட்டிருக்கிறார் சபாடினி. தலை நிமிர்ந்து தன்னம்பிக்கையுடன் நடக்க வேண்டும் என்பது முதல் பலவித body language ஐ இவருக்குச் சொல்லிக் கொடுத்த ஸ்போர்ட்ஸ் சைகாலஜிஸ்ட் ஜிம் லோஹர். மற்றவர் பிரேஸில் நாட்டைச் சேர்ந்த பயிற்சியாளரான கார்லோஸ் கிர்மயர்.

"தொடக்க காலத்தில் உடலில் எக்கச்சக்க தசைகளோடு சபாடினி காணப்பட்டார். ஒரு பெண்மணி -அதுவும் டென்னிஸ் வீராங்கனை- இப்படி இருப்பது நல்லதல்ல என்றபோது, முதலில் கோபப்பட்டாள். காரணம் அதுவரை யாருமே அவளது பலவீனங்களை எடுத்துச் சொல்லியிருக்காததுதான்" என்கிறார் கிர்மயர்.

இதே சபாடினிதான் பின்னர் 'டென்னிஸ் உலக தேவதை' என்று பெயர் பெற்றார்!

"என்ன ஒரு மினுமினுப்பான சருமம்! இந்த லத்தீன் நிறத்திற்கு ஈடு இணையே கிடையாது. இதுவரை விம்பிள்டனில் பங்கெடுத்துக் கொண்ட வீராங்கனைகளில் சபாடினி போன்ற அழகான கால்கள் வேறு யாருக்கும் அமைந்ததில்லை"- இப்படியெல்லாம் தடையின்றி அவர் உருவத்தை ரசித்து எழுதினார்கள் விளையாட்டு விமர்சகர்கள்!

— ஜி.எஸ்.எஸ்

படம்-நன்றி : ஸ்போர்ட்ஸ் ஸ்டார்

# கோடிக்கணக்கில் மதிப்புவாய்ந்த காந்திஜியின் கடிதங்கள் யாருக்குச் சொந்தம்?

"லண்டனில் ஏலம் விடப் போகும் காந்திஜியின் கடிதங்களை, ஏலம் போட வேண்டாம் என்று தயவுசெய்து தடுத்து நிறுத்துங்கள்!"

பிரதமர் அலுவலகத்திலிருந்து வந்த அவசர டெலிபோன் இது. நான் 28.10.96; இரவு ஒன்பது மணி. சென்னை ஆழ்வார்பேட்டையில் உள்ள, ஸ்ரீராம்நகர் தெற்கு தெருவில் இருக்கும் 'அப்சரா' அபார்ட்மெண்ட்டின் விஸ்தாரமான ஹாலில் நாம் வி. கல்யாணம் அவர்களைச் சந்திக்கச் சென்றபோதுதான் பிரதமர் தேவேகௌடாவின் அலுவலக அதிகாரியிடமிருந்து டெலிபோன் வந்தது.

சென்ற ஒரு வாரமாகவே செய்தித்தாள்களிலும் ச்கல டீவி சானல்களிலும், பரபரப்பான தகவல்கள் அடி பட்டுக் கொண்டிருக்கின்றன. லண்டன் 'சோத்பி' ஏல நிறுவனம் வழியாக காந்திஜி கைப்பட எழுதிய கடிதங்களை ஏலம் விடப்போகிறாராம் கல்யாணம்.

'இவை தேசியச் சொத்துக்கள். நாட்டுக்குத்தான் சொந்தம்' என்கிறது அரசு.

இதை ஏற்க மறுக்கிறார் கல்யாணம்.

"காந்திஜியின் கடைசி நாலு வருடங்களில், நான் அவருடன் கூட இருந்தேன். அவர் 1944 ஏப்ரலில் விடுதலை ஆன பிறகு, ஜூன் அல்லது ஜூலையில் அவருக்கு உதவியாளனாகச் சேர்ந்தேன். நான் தில்லியிலேயே பிறந்து வளர்ந்தவன். அரசாங்க உத்தியோகத்தில் இருந்தேன். காந்திஜியின் புதல்வர் தேவதாஸ் என் நண்பர். நான் சமூக சேவையில் ஈடுபட்டு, சேரிகளில் உழைத்தபோது தேவதாஸ் எனக்கு அறிமுகமானார். வார்தாவிலுள்ள சேவா கிராமத்துக்குக் காந்திஜியிடம் போய்ச் சேர்ந்தேன்."

"இந்தக் கடிதங்கள் உங்களுக்கு எப்படிக் கிடைத்தன?" என்று கேட்டோம்.

"உங்களிடம் கையால் எழுதி ஒரு கடிதம் கொடுத்துவிட்டு, இதை டைப் செய்து கொடுங்கள் என்று அலுவலகத்தில் கொடுக்கிறபோது என்ன செய்வீர்கள்? கடிதத்தை டைப் செய்து, கையெழுத்துக்கு அனுப்பி விட்டு, 'டிராஃப்ட்'டாக எழுதித் தந்த காகிதத்தைக் கிழித்துக் குப்பைத் தொட்டியில் போடுவீர்கள் இல்லையா? நான் அப்படிச் செய்யவில்லை. காந்திஜி டைப் செய்யக் கொடுத்த அவரது கடிதங்களை, அப்படியே பத்திரப்படுத்தி வைத்திருந்தேன். அவர் திங்களன்று மௌன விரதம் இருப்பார். அன்று அவர் சொல்ல வேண்டியதை அவ்வப்போது எழுதிக் கொடுப்பார். தினசரி நடக்கும் பிரார்த்தனைக் கூட்டச் சொற்பொழிவுகளில், திங்கள்கிழமைச் சொற்பொழிவை மட்டும் எழுதிக் கொடுத்து விடுவார். இவை எல்லாமாகச் சேர்ந்து சுமார் 400 – 450 பக்க அளவுக்கு வரும். இவை காந்திஜிக்கு யாரும் எழுதிய கடிதங்கள் அல்ல. காந்திஜியின் கடிதத்தை உரிய முறையில் டைப் செய்து, அவரது கையெழுத்தோடு அனுப்பிய பிறகு, நான் பத்திரப்படுத்தி வைத்த மூலப் படிவங்கள். அவை இன்றைக்கு இத்தனை கோடி ரூபாய் மதிப்புப் பெறும் என்றோ இப்படி ஏலம் போட்டு அதன் மூலம் பணம் சம்பாதிக்க வேண்டும் என்றோ நான் அன்று நினைத்துக் கூடப் பார்க்கவில்லை" என்றார் கல்யாணம்.

கல்யாணத்தின் 'ஹாபி'யே பழைய பஸ் டிக்கெட்டுகளைச் சேமிப்பது; பழைய தபால் தலைகளைச் சேமிப்பது; விதவிதமான தீப் பெட்டிகளைச் சேமிப்பது. முக்கியமான நிகழ்ச்சிகள் இடம்பெற்றிருக்கும் தினசரிகளின் பக்கங்களைச் சேகரித்து வைப்பதுதான்.

"காந்திஜியுடன் யாத்திரை போகும்போது எந்த எந்த ஊரில் என்னென்ன கிடைக்கிறதோ, அவற்றை எல்லாம் அந்தந்த ஊரிலேயே விட்டு விடுவோம். சுமந்து கொண்டு செல்கிற வழக்கமே இல்லை. கடைசியாக அவர் 'பிர்லா ஹவுசி'ல் இறந்து போகும் போது, கையில் இருந்த அத்தனை காகிதங்களையும் என்னுடைய பெட்டிகளில்




போட்டுப் பத்திரமாக எடுத்துக் கொண்டு வந்தேன். இதைத்தான் இவர்கள் 'நேஷனல் டிரஷர்'. நீங்கள் வெறுமனே கஸ்டோடியன்தான் என்கிறார்கள். நான் இவற்றைப் பத்திரப்படுத்தி வைக்க, நேஷனல் ஆர்கைவ்ஸ் அலுவலகத்துக்கு எழுதினபோதெல்லாம் பதில் எழுதக் கூட மாதக் கணக்கில் எடுத்துக் கொண்டார்கள். நான் காந்திஜியின் கடிதங்கள் என்னிடம் இருப்பது பற்றி, அப்போதே - அதாவது 1956ல் நான் சென்னை வந்து செட்டில் ஆனதிலிருந்தே, பல இடங்களில் - ரோடரி, லயன்ஸ் உட்பட - பல மேடைகளில் பேசி வந்திருக்கிறேன்" என்கிறார் கல்யாணம்.

ஜனவரி '95ல் அமெரிக்காவைச் சேர்ந்த, பிறப்பால் அமெரிக்கரான, பிறகு ஹிந்துவாக மாறிய சிவாய சுப்பிரமணிய சுவாமி என்பவரின் சீடர், கல்யாணத்தின் வீட்டில் ஒரு முறை தங்கியபோது, காந்திஜியின் கடிதங்களை 'சோத்பி' வழியாக ஏலம் போட்டால், நிச்சயம் 5 கோடி ரூபாய் வரை கிடைக்கும் என்றும், அதை சுவாமிஜி கட்டும் கோவிலுக்குச் செலவழிக்கலாம் என்றும் சொன்னாராம். சுவாமி அத்தனை கடிதங்களையும் திங்கள் கிழமைச் சொற்பொழிவுகளையும் சுமார் 450 பக்கங்களுக்குப் புத்தமாகத் தொகுத்து வெளியிட்ட பிறகு, இந்த ஒரிஜினல் கடிதங்களின் மதிப்பு இப்போது 11 கோடியைத் தாண்டிவிட்டது!

கல்யாணத்தின் நண்பரும், சுவாமிஜியின் சீடருமான இந்த நண்பரின் பெயர் ஈசன் காடிர். இங்கிலாந்துக்காரர். வேட்டிதான் கட்டுவார். 'சோத்பி' விற்பனையில் தாமதம் செய்கிறார்கள் என்று அறிந்த உடனே, அங்கிருந்து அவற்றைத் திரும்ப வாங்கி, பிலிப்ஸ் எனும் பிரபல ஏல நிறுவனத்துக்குக் கொடுத்து விட்டார். (இந்தச் செய்தியும் நாம் கல்யாணத்திடம் பேசிக் கொண்டிருக்கும்போதுதான் டெலிபோன் மூலமாகத் தெரிய வந்தது அவருக்கு.)

"இந்தக் கடிதங்கள் மூலம் வரும் அத்தனை கோடி ரூபாயையும் ஹவாயில் சுவாமிஜி கட்டும் கோயிலுக்குக் கொடுப்பதாக எழுதிக் கொடுத்து விட்டேன். என் வாக்கைக் காப்பாற்றியே ஆக வேண்டும்" என்கிறார் கல்யாணம்.

லண்டனில் உள்ள இந்திய ஹைகமிஷனர் சிங்வி, கல்யாணத்தை போனில் தொடர்பு கொண்டு, 'தயவுசெய்து அந்தக் கடிதங்களை அரசிடம் ஒப்படையுங்கள்' என்று கேட்டுக் கொண்டிருக்கிறார். தென்னாப்பிரிக்காவில் இப்போது இந்திய தூதராக இருக்கும் கோபால கிருஷ்ண காந்தியிடம் சொல்லி, எப்படியாவது இவரை மனசு மாற்றி, ஒப்புக் கொள்ளச் செய்யும்படி கேட்டுக் கொண்டிருக்கிறார்.

"நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்? கோபாலகிருஷ்ண காந்தி பேச்சைக் கேட்கப் போகிறீர்களா?"

"அவர் எனக்கு நண்பர். அவர் சொல்வதிலும் நியாயம் இருக்கிறது. ஆனால் நான் சுவாமிகளுக்குக் கோயில் கட்ட நிதி உதவியை இதிலிருந்து எடுத்துக் கொள்ளச் சொல்லி வாக்குக் கொடுத்து விட்டேன். 'சோத்பி'யிலிருந்து இப்போது பிலிப்ஸ் ஏல நிறுவனம் ஆவணங்களை வாங்கிக் கொண்டு விட்டது என் நண்பர் மூலமாக. அதைத் திரும்பப் பெற வேண்டுமானால் இவை தேசியச் சொத்து அல்ல; என்னுடைய சொந்த உடைமை என்ற எனது அடிப்படை வாதத்தை அரசு ஒப்புக் கொள்ள வேண்டும்!" என்கிறார் கல்யாணம்.

இந்தக் கட்டுரை வெளியாகிற போது, தேவேகௌடாவின் விசேஷ தூதர் என்ன செய்தி கொண்டு வந்தார், கல்யாணம் என்ன முடிவு செய்தார் என்பது வெளியாகி இருக்கும்.

பேட்டி, கட்டுரை : **எஸ்.வி.என்.**

படம் : **பாலாஜி**



பிடுகிறார்? 'தி.மு.க.வுக்கும் த.மா.கா.வுக்கும் உரசல்' என்று செய்திகள் போடும் பத்திரிகைகளைத்தான் முதல்வர் குறிப்பிடுகிறார் என்பது அவரது பேச்சைத் தொடர்ந்து கேட்டவர்களுக்குப் புரிந்திருக்கும்.

உள்ளாட்சித் தேர்தல் மூலம், மக்களுக்கு அதிகாரம் எடுத்துச் செல்லப்பட்டது ஒரு பாராட்டத்தக்க செயல் என்றால், அதே தேர்தல் நன்றாகச் செயல்பட்ட இரு கூட்டணிக் கட்சிகளுக்கிடையே, மனக்கசப்பை உண்டாக்கி இருக்கிறது என்பதும் நிதர்சனமான உண்மை! த.மா.காவின் மேல்மட்டத் தலைவர்கள் வேண்டுமானால், புண்ணுக்குப் புனுகு போட்டது போல் உரசலை மறைக்கலாமே தவிர தொண்டர்களுக்கிடையிலான உரசல் வெளிப்படையாகவே தெரிகிறது.

உள்ளாட்சித் தேர்தல் அறிவிப்பு வந்த காலகட்டத்

# தி.மு.க.

"உள்ளாட்சித் தேர்தலில் வெற்றி பெற்றவர்களை அழைத்து, நானும் மூப்பனாரும் வழங்குகின்ற அறிவுரையில் முக்கியமான அறிவுரை, 'மக்களுக்குப் பணியாற்றுங்கள்' என்பதாக இருந்தாலும் கூட 'எல்லா ஊரிலும் நீங்கள் ஒற்றுமையாகச் செயல்படுங்கள்' என்ற அறிவுரையும் முக்கியமாக இருக்கும் என்பதை, இந்த ஒற்றுமைக்கு ஊனம் வராதா என்று எண்ணிக் கொண்டிருக்கிற ஓநாய்கள் உணரட்டும் என்பதற்காக இப்போதே சொல்லி வைக்கிறேன்!" - சென்னை மாநகராட்சித் தேர்தலில் வெற்றி பெற்றவர்களுக்கு நடந்த பாராட்டு விழாவில் முதல்வர் பேசியது இது.

"ஓநாய்கள்' என்று முதல்வர் யாரைக் குறிப்

தில் பல்வேறு இடங்களிலும் மூப்பனார் கலந்து கொண்ட த.மா.கா. செயல்வீரர்கள் கூட்டங்களில், கொஞ்சம் ஆவேசமான தன்மானப் பேச்சுக்கள் இடம்பெற்றன. உதாரணமாக கீழைத் தஞ்சை மாவட்டத்தில் பி.வி. ராஜேந் திரன் போன்றோர், 'ஐம்பது சதவீத இடங் களை தி.மு.க.விடம் வலியுறுத்திப் பெற வேண் டும்' என்று பேசினார்கள்.

தி.மு.க. தலைமையோ முப்பது சதவீத இடங்கள்தான் த.மா.காவுக்கு என்பதில் ரொம்

பவும் தெளிவாக இருந்தது. அதனால் த.மா.கா. சார்பாக வந்த குழுவிடம், இரண்டாவது கட்ட தி.மு.க. தலைவர்களே பேசினர். கடைசியில் த.மா.காவுக்கு 36 சதவீதம் என்று முடிவாயிற்று. அதற்கப்புறம் எந்தெந்த இடங்கள் என்று தீர்மானிப்பதிலும் சிக்கல்! கடைசியாக முடிவு செய்யும்போது, தி.மு.கவிலும் சரி., த.மா.கா.விலும் சரி நிறையவே அதிருப்தி இருந்தது. த.மா.காவுக்கு 36 சதவிகித இடங்கள் கொடுத்ததே அதிகம் என்று தி.மு.க. தொண்டர்கள் முனக ஆரம்பித்தனர். இந்த அதிருப்திகளுடன்தான் கூட்டணி, தேர்தலைச் சந்தித்தது! இதனால்தான் பல இடங்களில் வேறு கட்சிகளும் சுயேச்சைகளும் வெற்றிக் கனியைப் பறித்தனர்.

மக்களால் தேர்ந்தெடுக்கப்



# த.மா.கா. உரசல்?



"தீபாவளிக்குத் துணிக்கடைக்குப் போன வன், பிடிச்சிருக்குன்னு சொல்லி ஐம்பது சட்டை எடுத்திட்டேன்..."

"அடேங்கப்பா! அப்புறம்?"

"அதுல ஒன்னை மட்டும் செலக்ட் பண்ணி வாங்கிட்டு வந்தேன்...!"

– தமாஷ்காரன்

படும் பதவிகளைப் பொறுத்தவரைதான் தி.மு.க. – த.மா.கா. இடஒதுக்கீடு செய்து கொண்டன. தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களால் நிரப்பப்படும் பதவிகளுக்காக நடந்த தேர்தலில் இவர்களின் குடுமிப்பிடி சண்டை தெருவுக்கே வந்து விட்டது! மாவட்டப் பஞ்சாயத்து தலைவர், துணைத்தலைவர், பஞ்சாயத்து யூனியன் தலைவர், துணைத் தலைவர் தேர்தலில் தமிழகம் முழுக்க இரு கட்சிகளும் மல்லுக் கட்டி நின்றன.

'தி.மு.க. வென்ற மாநகராட்சிகளிலும், நகராட்சிகளிலும் அதே கட்சியைச் சேர்ந்தவர்களே துணைத் தலைவர்களுக்குப் போட்டி போடுவார்கள்!' என்று கலைஞர் அறிவித்தது த.மா.கா. தலைவர்களைக் கலங்க வைத்தது. எங்கெங்கு தி.மு.க. தலைவர்கள் இருக்கிறார்களோ அங்கே த.மா.காவுக்குத் துணைத்தலைவர் வாய்ப்பு கொடுக்க வேண்டும் என்ற த.மா.கா. தலைவர்களின் கோரிக்கை, எந்தவித கருத்துப் பரிமாற்றமும் இல்லாமல் திமு.க. தலைமையால் தூக்கியெறியப்பட்டது.

"அது சரி... நாங்க தலைவர் பொறுப்பேற்றிருக்கிற இடத்தில் இவர்களுக்குத் துணைத் தலைவர் பதவி கொடுக்கும்பட்சத்தில் அந்தப் பதவிகளில் த.மா.காவின் பங்கு 64 சதம் ஆகிவிடுமே! அவர்களுக்குக் கிடைக்க வேண்டியது 36 சதம்தானே! தவிர, தலைவர் தி.மு.க., துணைத் தலைவர் த.மா.கா. என்று வந்தால் கால ஓட்டத்தில் இரு கட்சிகளும் பிரியும் போது, உள்ளாட்சி அமைப்புகளில் நிர்வாகம் பாதிக்கும் நிலை வரலாம். இந்தக் காரணங்களுக்காகத்தான் தலைவர் எங்களின் தெளிவான முடிவை முதலில் அறிவித்து விட்டார்" என்று சொன்னார் தென் மாவட்டத் தி.மு.க. பிரமுகர் ஒருவர்.

"துணைத் தலைவர் பதவி த.மா.காவுக்கு என்றால், சென்னையில் துணை மேயராக த.மா.கா. தான் வரும். அப்படி வருவது தமது மகன் ஸ்டாலினுக்கு ஒரு 'செக்' போல் அமைந்து விடும். அதைத் தவிர்க்கத்தான் கலைஞர் அப்படி அறிவித்து விட்டார்" என்கிறார்கள் த.மா.கா.வினர்.

தி.மு.க. – த.மா.கா. மோதல் காரணமாக, கன்னியாகுமரி மாவட்டப் பஞ்சாயத்து இந்தக் கட்சிகளின் பிடியில் இருந்து போய் விட்டது. இது தவிர, திருநெல்வேலி, மதுரை, கொடைக்கானல், காஞ்சிபுரம், பரங்கிமலை ஆகிய இடங்களில் ஒரு கட்சிக்கு ஒதுக்கப்பட்ட இடங்களில் இன்னொரு கட்சி போட்டியிட, ஏகக் குழப்பம். இதில் வேடிக்கை அல்லது வெட்கக்கேடு என்னவென்றால், எந்த அ.தி.மு.கவைக் கடுமையாக எதிர்க்கிறார்களோ அந்தக் கட்சியின் உதவியைக் கொண்டு, பல தி.மு.க. – த.மா.காவினர் தலைவர்கள், துணைத் தலைவர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றனர்! அந்தந்த இடங்களில் செல்வாக்குப் பெற்ற தி.மு.க.வினரும், த.மா.காவினரும் தங்கள் ஆதாயத்துக்கு ஏற்ப, தொகுதிகளை ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்திருக்கின்றனர்.

உதாரணமாக செங்கை கிழக்கு மாவட்ட எம்.எல்.ஏ. ஒருவருக்கு சில முடிவுகளை எடுக்க அதிகாரம் கொடுத்தார் மூப்பனார். அவரோ, த.மா.காவுக்குக் கிடைக்க வேண்டிய இடங்களை, தி.மு.கவுக்கு ஒதுக்கி விட்டார்! காரணம், அவரது நெருங்கிய சொந்தக்காரர்கள் தி.மு.க.வில் இருப்பதுதான்! தேர்தலில் சீட் கிடைத்து அவர்கள் வெற்றி பெற்றும் விட்டார்கள். "ராஜீவ்காந்தியின் ஆத்மா இவர்களைச் சும்மா விடாது" என்று வயிறெரிந்து சொன்னார் த.மா.கா. தொண்டர் ஒருவர்.

இதையறிந்துதான், 'பஞ்சாயத்துக்களில் போட்டியிடும் வேட்பாளர்களைத் தேர்வு செய்யும் பொறுப்பை மாவட்ட அளவில் விட்டதுதான் பெரிய தவறாகப் போய் விட்டது. வேட்பாளர் தேர்வில் பிரச்னை ஏற்பட்டு விட்டது. பஞ்சாயத்து உறுப்பினர்கள், தலைவர்களைத் தவிர, மற்ற பொறுப்புகளுக்கு மேலிடத் தலைவர்களே ஆட்களைத் தேர்ந்தெடுத்திருந்தால் இந்த மனக்கசப்பு இருந்திருக்காது. நடந்த தவறுக்கு நானே முழுப் பொறுப்பு ஏற்கிறேன்' என்று பெருந்தன்மையாக மூப்பனார் சொன்னார். என்றாலும் இரு கட்சிகளைச் சேர்ந்த கீழ்மட்டத் தொண்டர்களிடையே ஏற்பட்டு விட்ட கசப்பான அனுபவங்களைச் சீக்கிரம் மறப்பார்கள் என்று சொல்ல முடியாது.

"எங்களை விடுங்க ஸார். நாங்க புதிதாகத்



"அந்தப் பையன் 'ஆல்ரவுண்டர்'னீங்களே ரொம்ப புத்திசாலியோ!"

"நீங்க வேற.... அவன் எல்லாப் பாடத்துலயும் 'சைபர் மார்க்' வாங்கியிருக்கான்றதைத்தான் அப்படிச் சொன்னேன்."

- ஜெயாப்ரியன்

துவங்கிய கட்சி. எங்களுக்கு முறையான கட்சி அமைப்புகள் பல இடங்களில் கிடையாது என்பதும் உண்மை. பல குழப்பங்கள் எங்களிடம் உண்டு. ஒப்புக் கொள்கிறோம். ஆனால் தி.மு.க.வின் நிலை என்ன? அந்தத் தலைமை ஒப்புக் கொண்டபடி மாவட்டத் தலைவர்கள், ஒன்றியத் தலைவர்கள் செயல்படவில்லையே! அறிவாலயத்தில் ஸ்விட்ச் போட்டால் கன்னியாகுமரியில் லைட் எரியும் என்று தங்களது கட்சிக் கட்டுப்பாட்டைப் பற்றி தி.மு.க.வினர் ரொம்பவும் அலட்டிக் கொள்வார்கள். அப்படிப்பட்ட அந்தக் கட்சியின் தலைமை, இப்போது என்ன செய்யப் போகிறது? எந்த நடவடிக்கையும் எடுக்காத பட்சத்தில், தலைமையின் சம்மதத்துடன்தான் மாவட்டத் தி.மு.க. தலைவர்கள் செயல்பட்டார்கள் என்பது வெளிச்சத்துக்கு வரும். எங்களைப் பொறுத்தவரையில், மூப்பனார் அவர்கள் மாவட்டத் தலைவர்களிடம் அறிக்கை கேட்டிருக்கிறார். அந்த அறிக்கை கிடைத்தவுடன், தவறு செய்த - கட்டுப்பாட்டை மீறி நடந்த கட்சியினர் மீது கண்டிப்பாக நடவடிக்கை இருக்கும்!" என்கிறார் த.மா.கா.வின் இடைமட்டத் தலைவர் ஒருவர்.

"த.மா.கா.வினர் ஒருவித தவறான எதிர்பார்ப்புகளுடன்தான் கட்சியை நடத்தி வருகிறார்கள். ஏதோ தாங்கள் சொல்லித்தான் பொதுத் தேர்தலில் தி.மு.க. - த.மா.கா. கூட்டணியை ரஜினி ஆதரித்தது போலவும், தொடர்ந்து, தங்களுக்குத்தான் ரஜினி ஆதரவளித்து வருவது போலவும் பேசியும், செயல்பட்டும் வருகிறார்கள். த.மா.கா. தலைவர்களில் சிலர், ரஜினியை அரசியலுக்கு இழுக்கும் முயற்சியாகப் பத்திரிகைகளில் தவறான செய்திகளைப் போட வைக்கிறார்கள். ரஜினி அடிப்படையில் ஒரு கலைஞர். எங்கள் தலைவர் குடும்பமும் கலைக்குடும்பம். ஆக மூப்பனாருக்கு முன்பிருந்தே ரஜினியுடன் எங்களுக்குத் தொடர்பிருக்கிறது. தி.மு.க.வா, த.மா.கா.வா என்று ஒரு நிலை வந்தால் ரஜினியின் ஆதரவு எங்கள் பக்கமே இருக்கும்" என்று சொன்னார் தி.மு.க. பிரமுகர் ஒருவர்.

இப்படி இரு கட்சிகளுக்கிடையிலும் உரசல் தொடர்கிறது. "தி.மு.க. நமது முதுகில் குத்தி விட்டது. ஆகவே அந்தக் கட்சியுடன் உறவை முறித்துக் கொள்ள வேண்டும்" என்று சில மாவட்டங்களில் த.மா.கா.வினர் தீர்மானம் போட்டு அனுப்பியிருக்கிறார்கள். "காங்கிரஸாரின் கலாசாரமே, ஆதாயத்தை அனுபவித்து விட்டு, அடுத்தவர் முதுகில் சவாரி செய்யப் புறப்பட்டுப் போவதுதான். அ.தி.மு.க. ஆட்சியை முதல் மூன்றாண்டு காலத்துக்கு ஆகா, ஓகோவென்று புகழ்ந்து தள்ளினார்கள். பின்னர் அந்தக் கட்சிக்கு செல்வாக்கு சரிகிறது என்றதும் தங்கள் குரலை மாற்றிக் கொண்டார்கள். அது போலத்தான் இப்போதும் செயல்படுவார்கள். இதைப் பற்றியெல்லாம் நாங்கள் கவலைப்பட மாட்டோம். உடன் யார் வருகிறார்களோ இல்லையோ, எங்கள் பயணம் தொடரும்" என்றார் சென்னை நகர தி.மு.க. சட்டமன்ற உறுப்பினர் ஒருவர்.

சென்ற சட்டமன்றத் தொடரில் உறுப்பினர்களின் கேள்விக்கு பதிலளித்த முதல்வர், 'த.மா.கா.வுடன் எங்கள் தேனிலவு முடிந்து விட்டது; குடும்ப வாழ்க்கை துவங்கியிருக்கிறது!' என்று குறிப்பிட்டார். கணவனும் மனைவியும் கலந்தாலோசித்து ஒரு மனதாகச் செயல்பட்டால்தான் குடும்பம் குழப்பமின்றி இருக்கும். இது கலைஞருக்கு தெரியாததல்ல. பார்ப்போம்.

- ப்ரியன்

---

"சார் பெரிய ஃபுட்பால் ப்ளேயர்!"

"அதெப்படி?"

"ஃபுட்பாலெல்லாம் ஒரே அளவுதானே இருக்கும்!"

— வெ. ராஜாராமன்



# காற்றுக்கு உயிர் போகிறது...

பசிக்கு அழும் குழந்தையைத் தள்ளி
அமிலம் கசியும் மார்பை மூடும்
கிழட்டுத் தாய்!

முத்த ஈரம்கூட அரிக்கும்
என்பதால்
முகத்தைத் திருப்பிக் கொள்ளும்
முதல் இரவு மனைவி!

சிறகுகளைக் காப்பாற்றிக்கொள்ள
பூக்கள் பக்கமே திரும்பாத
வண்டு!

வேர்களை வாரிச்சுருட்டி
தண்ணீரைப் பார்த்து நடுங்கும்
மரம்!

தொட்டிலே பாடையாகிப்போன மாதிரி
மிதந்து மிதந்து நதியோடுபோகும்
பிணமீன்!

சூரியக்குச்சி
எங்கே உரசிவிடுமோ என்று
உருண்டு உருண்டு ஓடப்பார்க்கும்
பூமி!

மாரடித்து அழக்கூட ஆளில்லாமல்
அந்தரத்தில் கிடக்கப்போகிறது
அனாதைப் பிணம்!

நம் அதிகாரத்தின் கழிவு தெரிந்து
ஐம்பூதங்களின் முகம் சிதைகிறது!

நாம்
உதடுகுவித்து ஊதிய புகை அப்பி
இயற்கையின் உள்மூச்சு தீய்கிறது!





## கல்கி – அனுபவ் குரூப் இணைந்து நடத்திய கவிதைப் போட்டியில் முதல் பரிசு ரூ. 10,000 பெறும் கவிதை....

அனார்கலியைப் புதைக்க
இத்தனை அக்பர்களா?
இயற்கையின் மார்பில்
ஈட்டி செருகிவிட்டு
எதை ஆளப்போகிறோம்
இதைவிட உயர்வாய்?

அடுத்த தலைமுறை
புல்வெளியில் புரளட்டுமே!
தும்பியைத் துரத்தட்டுமே!

மழையில் தொப்பட்டையாய் நனைந்து
சளி ஒழுகி திரியட்டுமே!

ஓடையில் தூண்டில் போட்டு
அயிரை மீன்களை கட்டுப்பார்க்கட்டுமே!

வரும் சந்ததிகளின் பாதையில்
மலம் கழித்துவிட்டுப் போக
மனசு வந்தது எப்படி?

அவர்களை ஊனமையாக்கி
அகராதி தந்துவிட்டுப் போனால்
நாம்
பைத்தியம் அல்லாமல்
என்னவென்பது?

— இரா. பச்சியப்பன்.

**தமிழக முன்னாள் முதல்வர் எம். பக்தவத்சலம் அவர்களின் நூற்றாண்டு விழா நவம்பர் 9-ம் தேதி தொடங்குகிறது...**

# தமிழகத்தின் தனிப்பெரும் தலைவர்!

**சி. சுப்பிரமணியம் (முன்னாள் மத்திய நிதியமைச்சர்) :** அந்தக் காலத்தில் காங்கிரஸ் இயக்கத்தில் சேர்ந்தவர்கள் இரண்டு வகை. காந்தியடிகள் மேல் வைத்த நம்பிக்கையில், விடுதலை வருமா வராதா? வருவதானால் எப்போது வரும் என்று எதுவுமே தெரியாத நிலையில் கூட ஒரு தியாக உணர்வோடு கட்சியில் சேர்ந்து ஜெயிலுக்குப் போனவர்கள் உண்டு. விடுதலைக்குப் பின் காங்கிரஸ் அமைச்சரவை அமைக்கும் என்பது உறுதியான பிறகு, அந்த இயக்கத்தில் சேர்ந்தவர்களும் உண்டு. பெரியவர் பக்தவத்சலம் முதல் வகை காங்கிரஸ்காரர்.

எந்தத் துறை அமைச்சராக அவர் இருந்த போதும் அவரின் நிர்வாகத் திறமை பளிச்சிட்டது. நீர்ப்பாசன அமைச்சராக அவர் போட்டு நிறைவேற்றிய திட்டங்கள் இன்றும் அவர் பேர் சொல்லிக் கொண்டிருக்கின்றன. யாரும் எப்போதும் அவரைப் போய்ப் பார்க்கலாம். பந்தா கிடையாது. பேசிக் கொண்டிருப்பார். நாம் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருக்கும்போதே ஃபைலையும் பார்த்துப் படித்து டிஸ்போஸ் செய்வார். இது ஒரு அபூர்வ கலை. அவருக்கு இது கைவந்த கலை. நான் பலமுறை பார்த்து வியந்திருக்கிறேன்.

ரொம்பவும் கண்டிப்பானவர், மாணவர்களின் ஹிந்தி எதிர்ப்புப் போராட்டத்தை அவர் கையாண்டவிதம் சரியல்ல என்பது அவர் மீது பொதுவாக சாட்டப்பட்ட குற்றங்கள். கண்டிப்பானவர் என்று நான் சொல்லமாட்டேன். ஆனால் இந்தி எதிர்ப்புப் போரை அவர் சரியாக அணுகவில்லை என்பதுதான் என் கருத்தும். சந்திக்க வந்த மாணவர்களைச் சந்திக்காமல் போனதும், தடியடி துப்பாக்கிச் சூடு போன்ற அசம்பாவிதங்களும்தான் பின்னர் வந்த தேர்தலில் காங்கிரஸ் தோற்றுப் போகக் காரணங்கள் என்றாலும் அவரிடம் இருந்த பல நல்ல குணங்கள் அவரை தமிழகத்தின் தனிப் பெரும் தலைவராகவே என்றும் அடையாளம் காட்டும்.



**ஆர். வெங்கட்ராமன் (முன்னாள் குடியரசுத் தலைவர்) :** விடுதலை இயக்கத்துக்காகத் தமது வழக்கறிஞர் தொழிலை கைவிட்டபோதே பக்தவத்சலம் அவர்களின் தியாகம் தொடங்கி

விட்டது.

காங்கிரஸ் கட்சியில் பல பிரச்னைகளுக்குத் தீர்வு காணு வதில் அவரின் அனுபவ ஆலோசனைகள் பெருதவியாய் இருந் திருக்கின்றன.

அபார தெய்வபக்தி அவருக்கு. எதைச் செய்தாலும் கட வுளை நினைத்தே செய்கிறேன் என்று அவர் என்னிடம் கூறிய துண்டு.

ஆலயத்துறை அவரிடம் இருந்தபோது, ஆலயங்கள் பரா மரிக்கப்பட்டதைப் போல வேறெப்போதும் இல்லை என்பது என் அபிப்ராயம்.

சி.எஸ். டெல்லி போன பின்பு நிதித்துறையை அவர் கையாண்டார். அடுத்தவர் மெச்சுவதற்காகவோ, மற்றவர்கள் புகழவேண்டும் என்பதற்காகவோ அவர் எந்த நிதி திட்டங் களையும் வகுத்தவர் அல்ல. முடிவு எடுக்கையில் அவசரம் காட்டவோ, கோபப்படவோ மாட்டார். தாம் பெரும் சேவை செய்து கொண்டிருக்கும் உண்மையை அவரே எப்போதும் உணர்ந்ததில்லை என்பதுதான் அவரின் தனிச்சிறப்பு.

அவர் அமைச்சரவையில் நான் தொழிலமைச்சர். எங்க ளுக்கு முடிவெடுப்பதில் சகல சுதந்திரம் கொடுத்திருந்தார். ஏன் இப்படி எடுத்தாய் என்று கேட்டதே இல்லை. இது என்ன அது என்ன என்று சந்தேகம் கேட்பார். ஆனால் அதிகாரி களிடம் கண்டிப்பு காட்டுவார். அதே சமயம் அவர்களிடம் உள்ள திறமையைப் பாராட்டி ஊக்கப்படுத்துவார். அவரது தலைமையில் தமிழகம் சிறந்த நிர்வாகத்தை உணர்ந்தமைக்கு அவரது கண்டிப்பு, பாராட்டு இரண்டும்தான் காரணம் என் பேன் நான்.

**சரோஜினி வரதப்பன் :** அப்பாவிடம் நான் வியந்தது அவரது மங்காத நினைவாற்றல். 90 வயதில் கூட அவருக்கிருந்த ஞாபக சக்தி அபாரம். காரில் போகும்போது கண் பார்வை மிகக் குறைந்த நிலையிலும் அவர் வழி சொல்லும் அழகே தனி. இத்தனையாவது மைலில் பெட்ரோல் பங்க் வரும், பிரிட்ஜ் வரும், வாராவதி வரும் என்று துல்லியமாகச் சொல்வார்.

நேரந்தவறாமைக்கு அப்பா ஒரு இலக்கணம். பல சமயங் களில் இவர் விழாக்களுக்குப் போய்ச் சேரும்போதுதான் தோரணம் கட்டிக் கொண்டிருப்பார்கள். அல்லது மைக் அமைத் துக் கொண்டிருப்பார்கள். இவர் கவலைப்படுவதே இல்லை. அவர் கூட எங்காவது கிளம்ப வேண்டுமானால் எங்களுக்குப் பயம். சொன்ன நேரத்துக்கு நாங்கள் ரெடியாகவில்லையென் றால் கவலையேபடாமல் எங்களை விட்டுட்டு கிளம்பி விடுவார்.

ஸ்ரீராமஜெயம் எழுதாமல் இருந்ததில்லை. பார்வை மங்கிய போதும் எழுதி விடுவார். அதே போல் பேப்பர் படிப்பது. நாட்டு நடப்புகளை அப்-டு-டேட்டாக அறிந்து வைத்திருப்பார். இறுதி நாட்களில் உதவியாளர் படித்துக் காட்ட உன்னிப்பாகக் கேட்டுக் கொள்வார்.

பல்வேறு சமூக சேவை அமைப்புகள் தொடர்பாக இந்தியாவின் பல்வேறு பகுதிகளுக்குப் பயணம் போகும் போது நான் இன்னார் மகள் என்று தெரிந்து கொண்டதும் எனக்குத் தரப்படும் சிறப்பு மரியாதை இருக்கிறதே, அது அப்பாவின் நேர்மைக்கு இன்றும் கிடைக்கும் மரியாதை. அதுவே எங்க ளுக்கு அவர் சேர்த்து வைத்துள்ள பெரும் சொத்து. எனக்கு அது போதும்.

பேட்டி : **ராணிமைந்தன்**

# வரிபாக்கிகள் ஒரு கணக்கு!

**இந்தியாவில் 31 மார்ச், 1996-ல் வரி பாக்கியாளர்களின் முதல் பத்துப் பேர்.... (கோடி ரூபாய்களில்)**

1. ஹர்ஷத் மேத்தா – 5143.86
2. ஹிடன் பி. தலால் – 1542.88
3. பூபேந்திர சி. தலால் – 726 .69
4. அஸ்வின் மேத்தா – 632.45
5. திருமதி ஜோதி மேத்தா – 591.67
6. A.D. நரோத்தம் – 501.31
7. பீர்லஸ் இன்சூரன்ஸ் – 440.23
8. குரோ மோர் ரிசர்ச் & அசெட்ஸ் மேனேஜ்மெண்ட் – 316.34
9. பஞ்சாப் நேஷனல் பேங்க் – 249.83
10. லட்சுமி டிஸ்டிரிப்யூட்டர்ஸ் – 198.99

*இதுவே ஏறக்குறைய 10 ஆயிரம் கோடி. பெரிய பட் ஜெட் பற்றாக்குறையையே நிவர்த்திக்கலாமே!*

ஆதாரம் : **ஜென்டில்மேன் அக்.'96**

**— இரா. சந்திரசேகரன்**

"சேதி தெரியுமா? இந்த வருஷ தீபாவளிக்குப் பதினேழு படங்கள் ரிலீஸா கத் தயாரா இருக்கு. தியேட்டர் கிடைக்கறதைப் பொறுத்து, எட்டுலேருந்து பன்னிரண்டு படங்கள் ரிலீஸாவலாம்னு தகவல்."

– பிலிம் சிட்டிக்குப் போகிற வழியில் சென்ட்ரல் பாலிடெக்னிக் வாசலில் மரத்தடி டீக்கடையில் டீ சாப்பிட்டுக் கொண்டிருந்தேன். பின்புறமாக வந்து தோளைத் தட்டி, பேச ஆரம்பித்தான் தண்டபாணி.

"ரஜினி, மணிரத்னம் தவிர ஏறக்குறைய எல்லா சினிமா வி.ஐ.பி.க்களோட படமும் ரிலீஸுக்கு வருது இந்த வாட்டி. பாலசந்தர், பாக்யராஜ்லேருந்து காதல் கோட்டை அகத்தியனோட படம் வரைக்கும் டைரக்டர்ஸ் பிலிம் அஞ்சாறு. அப்புறம் பிரபுவோட பாஞ் சாலங்குறிச்சி, பிரபுதேவாவோட மிஸ்டர் ரோமியோ, விஜயகாந்தோட அலெக்சாண்டர், சரத்குமாரோட நேதாஜி, கமலோட அவ்வை சண்முகி... இதெல்லாம் தவிர, புது ஆளுங்க படங்கள் சிலதும் வருது. நாளன்னையிலிருந்து தமிழ் ரசிக மகா ஜனங்களுக்கு வேட்டைதான்."

"தியேட்டர் கிடைக்காதே தண்டபாணி?"

"அதான். புத்திசாலித்தனமா, பெரிய கம்பெனிக்காரங்க சில பேர் என்ன பண்ணியிருக்காங்க தெரியுமா? படம் எடிட்டிங் வர்றதுக்குள்ளாறவே சில தியேட்டர்களைப் பிடிச்சி, புக் பண்ணி, எதுக்கும் இருக்கட்டும்னு பேப்பர்ல விளம்பரம் கூட குடுத்துட்டாங்க. பின்னால ஒருவேளை படம் முடியாட்டாக் கூட கேன்ஸல் பண்ணிக்கறதுல பிரச்னை ஒண்ணும் இல்லை பாரு."



"இத்தனை படம் வருது. சரி. எத்தனை ஓடும்னு நினைக்கறே?"

"அது சொல்ல முடியாது. கமல், பிரபுதேவா, அகத்தியன் படங்களுக்கு மட்டும் ஒரு சிறப்பான எதிர்பார்ப்பு இருக்கு. மிஸ்டர் ரோமியோ ஓடினாத்தான் பிரபுதேவாவுக்கு எதிர்காலமே. அவரை நம்பி சமீபத்துல சில படங்களுக்கு பூஜை போட்டிருக்கற தயாரிப்பாளரெல்லாம் கூட, தீபாவளிக்கப்புறம் தான் படத்தை ஆரம்பிக்கிற உத்தேசத்துல இருக்காங்கன்னா

பார்த்துக்க."

"அப்புறம்?"

"அகத்தியனோட 'கோகுலத்தில் சீதை' சமாசாரம் கொஞ்சம் வித்தியாசமானது. அவரோட முதல் மூணு படத்தால அவருக்கொண்ணும் பிரமாதமான பேர் கிடைக்கலை. காதல் கோட்டைதான் அவருக்கொரு உயரத்தைக் கொடுத்தது. அதுலேயும் சிக்கல். அது வேற ஒருத்தரோட கதை அப்படீன்னு நியூஸ் வந்து, அகத்தியனோட நிஜமான சாமர்த்தியம் என்னன்னு ஒரு கேள்வி எழுந்தது இல்லையா? இந்தப் படம் ஓடினாலும் சரி; ஓடாட்டாலும் சரி... அகத்தியனுக்குக் கிடைச்ச ஓவர் நைட் ஸ்டார்வேல்யூ நிக்கறதும் நிக்காததும் இந்தப் படத்துக்கு அவர் தந்திருக்கற ட்ரீட்மென்ட்டைப் பொறுத்துத்தான் நிச்சயமாகும்."

"அடடா, இப்படி பயமுறுத்தறியே தண்டபாணி?"

"ப்பூ! இது ஒரு பயமுறுத்தலா? இன்றைய தேதிக்குக் கோடம்பாக்கத்தையே பயமுறுத்தி, அலற அடிக்கறது யார் தெரியுமா?"

ஹீரோயின்களுக்கு மூணு, நாலு ரூபாய்க்கு மேல குடுத்துப் பழக்கமில்லையேன்னு அவனவன் டிங்கு ஜூரம் கண்டாப்பல மிரண்டு போயிடறாங்க தெரியுமா?"

"நெசமாவா?"

"பின்ன? என்ன கதை, எத்தனை நாள் கால் ஷீட், எத்தனை நீச்சல்குள காட்சி... எதுவும் கேட்கறதில்லையாம். ரேட்டுக்கு ஒத்துக்கிட்டா, ஜம்முனு சிரிச்ச முகத்தோட பூஜைக்கு வந்து கற்பூரம் ஒத்திப்பாங்க."

"காத்து வீசுது தண்டபாணி."

"அதான்! அருணாசலத்துல வேற நடிக்கறாங்களா? அது ரிலீஸானப்புறம் எங்க புயல் காத்தாயிடப் போகுதோன்னு இப்பப் பலருக்குக் கலக்கம்."

"சரிதான்."

"இதுக்கு நேரெதிரா இருக்குது இன்றைய இளம் ஹீரோக்களைப் பற்றிய தகவல். தெரியுமா? அஜித்குமார், விஜய், வினீத், அப்பாஸ் இவங்களையெல்லாம் தனித்தனியாவோ,

# கோடம்பாக்கத்தையே பயமுறுத்தும் ரம்பா!

"சொல்லு, தெரிஞ்சிக்கறேன்."

"ரம்பா!"

"என்னது? ரம்பாவா? போப்பா. அவங்க பாட்டுக்கு அக்கடான்னு கிடைச்ச துணியைக் கட்டிக்கிட்டு சமர்த்தா ஆடிப் பாடிட்டுப் போயிட்டிருக்காங்க. தவிர, ஷூட்டிங் ஸ்பாட்டுல பிரச்னையே தராத நடிகைன்னு பார்க்கறவங்களெல்லாம் வாயாரப் புகழறாங்க..."

"அதெல்லாம் சரி. அம்மணி பயமுறுத்தறது சம்பள விஷயத்துல. யாராவது ஒப்பந்தம் பண்ணப் போனா, ரெண்டு கை, ரெண்டு கால் விரல்களையும் விரிச்சிக் காட்டி அபிநயம் பிடிக்கறாங்களாம். 'இது ஏதடா, நம்ம ஊர்ல

ரெண்டு ரெண்டு பேராவோ சேர்த்துப் போட்டு நிறையப் படம் சமீப காலமா வருது இல்லை? என்ன காரணம்னு கேட்டால் நம்ப முடியாத தகவலா சொல்றாங்க."

"ஏன்? இலவசமா நடிச்சிக் குடுக்கறாங்களாமா?"

"விட்டாப் போதுமே? சம்பள விஷயத்துலேருந்து சகலமானதுலயும் அட்ஜஸ்ட் பண்ணிக்கறாங்களாம். ஈகோ பிரச்னையெல்லாம் இல்லாம செட்டுல இவங்க கலகலப்பா சேர்ந்து பழகறது; ஒருத்தருக்கொருத்தர் விட்டுக் கொடுக்கறதையெல்லாம் நீ நேர்ல பார்த்தால் மயக்கம் போட்டுடுவே கிச்சா. நேத்திக்கு

'நேருக்கு நேர்' ஷூட்டிங்குல அஜித்தும் விஜயும் கொஞ்சிக் கொஞ்சிப் பேசி சிரிச்சதைப் பார்த்தேன். என் கண்ணே பட்டுடும் போல இருந்தது."

"நேருக்கு நேர் ஆரம்பிச்சிட்டாங்களா?"

"நல்லா கேட்டே. முப்பது பர்சென்ட் ஷூட்டிங் முடிஞ்சு போச்சு. விஷயம் தெரியுமா? 'ஆசை' சக்ஸஸுக்கு அப்புறமும் வசந்தோட இந்தப் படத்துல கேமராமேன் ஜீவாவைக் கழட்டி விட்டுட்டாங்க. இதுக்கு கே.வி. ஆனந்த்!"

"பாவம்யா. ஜீவாவை ஷங்கரும் கழற்றி விட்டுட்டார்னு கேள்விப்பட்டேன்?"

"ஆமாம். அவரோட 'ஜீன்ஸ்' படத்துக்குக் கேமரா, ஜீவா இல்லை."

"வேற யாரு?"

"சொன்னால் ஆச்சர்யப்படுவே. அசோக் குமார்!"

"நிஜமாவா?"

"என்ன நீ? ரம்யாகிருஷ்ணன் மாதிரி வாயைப் பொளக்கறே? அவங்கதான் தெலுங்கு மக்கள் தம் மேல வெச்சிருக்கற அபரிமிதமான அன்பை நினைச்சி, இறங்கிப் போய் வாய் பிளந்து நிக்கறாங்க."

"என்ன விஷயம்? ரம்யாகிருஷ்ணனைப் பார்த்தியா?"

"ஆமாம்ப்பா. ஏதோ தெலுங்குப் பட ஷூட்டிங்குக்காக பிலிம்சிட்டிக்கு வந்திருந்தாங்க. ஆந்திரா பக்கம் போனவங்க, அப்புறம் ஆளையே காணோமேன்னு பார்த்து, நலம் விசாரிச்சிட்டு வரலாம்னு போய் 'என்ன மேடம் சௌக்கியமா?'ன்னு கேட்டேன். 'அடடே, தண்டபாணியா? உன் கையால டச்சப் பண்ணி எத்தனை வருஷமாச்சு...? அப்படீன்னு...."

"சரி, சரி. விஷயத்துக்கு வந்துடு."

"வரேன். 'என்ன மேடம், தமிழ் ஃபீல்டே வேணாம்னு போயிட்டீங்களா'ன்னு லேசா ஆரம்பிச்சேன்."

"சரி."

"திறமையை இங்க யார் கண்டுக்கறாங்க? கவர்ச்சிக்குத்தான் மரியாதை தராங்க. அங்க நான் அம்மனா நடிச்சாலும் ரசிக்கறாங்க. கவர்ச்சியா நடிச்சாலும் ரசிக்கறாங்க. இங்க நூறு பேர்ல ஒருத்தியா இருக்கறதை விட அங்க எத்தனை பேர் இருந்தாலும் நம்பர் ஒன்னா இருக்கற பெருமை இருக்கே?'ன்னாங்க."

"எங்கிருந்தாலும் நல்லா இருந்தா சந்தோஷம்தானே தண்டபாணி?"

"தொட்டுட்டே போ! கடைசியா ஒரு செய்தி சொல்றேன், கேட்டுக்கோ. மாதுரி தீட்சித்துக்கு திடீர்னு பிராணிகள் மேல அதிக அக்கறை வந்துட்டாப்பல தெரியுது."

"ப்ளூ கிராஸ் மெம்பர் ஆயிட்டாங்களாமா?"

"இன்னும் இல்லை. ஆனால் யாராவது பத்திரிகைக்காரன் பார்க்கப் போனால் தெருவுல நாய்கள் லாரிகளால் அடிபடறது பற்றியும், வனவிலங்குகளுக்குப் பாதுகாப்பு இல்லை; நிறைய உயிரினங்கள் வேட்டையாடப்படறது ரொம்ப வருத்தமா இருக்குது அப்படீன்னு ரொம்ப உருகறாங்கன்னு செய்தி."

"எலக்ஷன்ல நிற்கத் தகுதி வந்துட்டே இருக்குதுன்னு நினைக்கறேன். வரட்டுமா? அடுத்த வாரம் பார்ப்போம்."

- கிச்சா



"சார்... உங்களைக் கையெடுத்துக் கும்பிடறேன். எண்ணெய் தேய்ச்சுக் குளிச்சாச்சு! தயவுசெய்து தைக்கக் கொடுத்த துணியைக் கொடுத்திடுங்க!"

— ஜெ. கீதா

"அவர் வீண் பந்தா பண்ணியே நஷ்டப்பட்டுட்டார்."

"எப்படி?"

"பட்டாசுக் கடைக்கு ஏ.ஸி. பண்ணினார்னா பாரேன்!"



• சரஸ்வதி நகருக்குப் புதிய திட்டம்

# அமைச்சர் சொன்னார்; அதிகாரிகள் செய்தார்களா?

**கடந்த 21.7.96 அன்று சென்னையைச் சுற்றியுள்ள சில புறநகர்ப் பகுதிகளுக்கு, உள்ளாட்சித் துறை அமைச்சர் கோ.சி. மணியை திடீர் விசிட்டாக அழைத்துச் சென்று பிரச்னைகளை விளக்கினோமல்லவா! அந்தப் பிரச்னைகள் தீர சம்பந்தப்பட்ட அதிகாரிகள் என்னென்ன நடவடிக்கைகள் எடுத்திருக்கிறார்கள்? மறுபடியும் நாம் ரீ-விசிட் செய்து விசாரித்தபோது...**

• கமிஷனர் சுதர்சன சௌத்ரி



கழிவுநீரும் மழைநீரும் தேங்குவதால் உள்ளகரம் – புழுதிவாக்கம் ஊராட்சியைச் சேர்ந்த சரஸ்வதி நகர் முழுவதுமே ஒரு தீவு போல் காட்சியளிப்பதைப் பார்த்த அமைச்சர், உடனடியாக தமிழ்நாடு குடிநீர் வழங்கல் மற்றும் கழிவுநீரகற்றும் வாரியத்தின் மானேஜிங் டைரக்டர் இல. பழமலையை அழைத்து ஆவன செய்யச் சொன்னார்.

இப்போது அதிகாரிகள், சரஸ்வதி நகரில் தண்ணீர் தேங்காமல் இருப்பதற்கான திட்டமொன்றைத் தயாரித்திருக்கிறார்கள். அந்தத் திட்டத்தின் மதிப்பு 1.71 கோடி ரூபாய். திட்ட அனுமதிக்காகவும் நிதி ஒதுக்கீட்டுக்காகவும் கடந்த

# பாலசந்தரோடு, கல்கி படம் பார்க்கப் போகிற கல்கி வாசகர்கள்!

கல்கி - ஸ்லோகன் போட்டிக்கு உற்சாகமாகக் கார்டுக் கணைகள் எய்த ஆயிரக்கணக்கான வாசகர்களுக்கு நமது முதல் நன்றி.

கீழ்க்கண்ட மூன்று சுலோகன்கள் சிறந்தவையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன :

**1. மாறுபட்ட சிந்தனையால்
வேறுபட்ட வார இதழ்!**

ஆர். ரமணன்
*1/19.* அக்ரஹாரம், கடவாசல் (S.O.)
சீர்காழி தாலுகா.
நாகை காய்தே மில்லத்
மாவட்டம் - *609 104.*

**2. பக்கம் தவறாமல் படிக்கிறோம்;
படிக்கத் தவறினால் தவிக்கிறோம்!**

அரசியன்பன்
பாம்பாக்கை,
அம்மையப்பன் - *613 701.*
திருவாரூர்.

**3. பார்த்தால் புதுசுகம்!
படித்தால் பரவசம்!**

ஆர். சுவாமிநாதன்,
E2/14F, BHEL டவுன்ஷிப்,
திருச்சி - *620 014.*

தேர்ந்தெடுக்கப்பட்ட இம் மூன்று கல்கி வாசகர்களும் வருகிற 8.11.96-ம் தேதியன்று டைரக்டர் கே. பாலசந்தருடன் அமர்ந்து, அவரது தீபாவளி வெளியீடான 'கல்கி' படத்தை, தீபாவளிக்கு முன்பே பார்க்கிற வாய்ப்பைப் பெறுகிறார்கள்.

பாலசந்தருடன் அவர்கள் நிகழ்த்துகிற விவாத விவரங்கள் அடுத்த வாரம்.

*11.9.96*-ல் அரசுக்கும் அனுப்பி விட்டார்கள். இனி அரசுதான் ஆவன செய்ய வேண்டும்.

ஆலந்தூர் நகராட்சி எல்லைக்கும் சென்னை மாநகராட்சி எல்லைக்கும் நடுவிலிருக்கிற பச்சையம்மன் கோயில் கேட் என்னும் பகுதியிலுள்ள மெயின் ரோட்டில் எப்போது பார்த்தாலும் கழிவுநீர் ஓடிக் கொண்டேயிருந்தது. இப்போது அதைச் சரிசெய்து விட்டது, ஆலந்தூர் நகராட்சி.

இந்த நகராட்சியைச் சேர்ந்த நங்கநல்லூரிலுள்ள மிகப் பெரிய குளம் கொசுக்களின் பிறப்பிடம். காரணம், குளத்தில் தேங்கி நிற்பது மழை நீர் அல்ல; சாக்கடை நீர்தான் என்பது. குளத்தில், "சாக்கடை நீர் வந்து விழாமல் தடுப்பதற்காக 1.50 லட்சம் செலவில் மூன்று திட்டங்கள் வகுக்கப்பட்டு அனுமதியும் கிடைத்து விட்டது. இடையில் உள்ளாட்சித் தேர்தல் வந்து விட்டதால் வேலைகளைத் துவங்க முடியவில்லை. இதே போல்தான் அமைச்சர் குறிப்பிட்ட மற்ற பணிகளின் நிலையும். இதோ, இனி ஆரம்பித்து விடுவோம்!" என்றார் ஆலந்தூர் நகராட்சி கமிஷனர் சுதர்சன சௌத்ரி.

இதோடு, புறம்போக்கான இந்தக் குளத்தை இடையில் தனியார் ஒருவருக்குப் பட்டா போட்டுக் கொடுத்து விட்டதால், அதை எதிர்த்து நீதிமன்றத்துக்குச் சென்றிருக்கிறது நகராட்சி. இந்த வழக்கு முடிந்தவுடன் இந்தக் குளப்பகுதியில் ஷாப்பிங் காம்ப்ளக்ஸ் கட்டுகிற திட்டத்தையும் நகராட்சி தயாராக வைத்திருப்பதாகக் கூறினார் கமிஷனர்.

மற்றபடி அமைச்சரோடு சுற்றிப் பார்த்த பெரும்பகுதியான ஆலந்தூர் நகராட்சிப் பகுதிகளில் காணப்பட்ட சிறு சிறு குறைபாடுகளை உடனடியாகத் தீர்த்திருக்கிறார்கள். ஆனால் இன்னமும் குப்பைத் தொட்டிகளிலுள்ள குப்பைகளை அள்ளுவதில் மாத்திரம் சுறுசுறுப்பு காணப்படவில்லை!

கேட்டபோது, "வாகனப் பற்றாக் குறைதான் காரணம். இப்போது புதிய வாகனங்கள் வாங்குவதற்கான ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருக்கிறோம். இனி விரைவில் ஒவ்வொரு குப்பைத் தொட்டியிலிருந்தும் இரண்டு நாட்களுக்கு ஒருமுறை குப்பைகளை அள்ளி விடுவோம். வேண்டுமானால் மறுபடியும் ஒரு விசிட் செய்து பாருங்கள்!" என்றார் ஆலந்தூர் நகராட்சி கமிஷனர்.

**- பிரின்ஸ்**

படம் : **பேஜர் கே. மூர்த்தி**




1996 நவம்பர் 10
தாது ஐப்பசி 25
மலர் : 55
இதழ் : 15


# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## எஸ்.டி.எஸ். விடுதலை: எழுகின்ற சந்தேகங்கள்!

**வ**ழக்கறிஞர் விஜயன் தாக்குதல் வழக்கில், எஸ்.டி.எஸ்., ஆதிராஜாராம் முதலான பதினான்கு பேர் சென்னை உயர்நீதி மன்றத்தால் விடுவிக்கப்பட்டிருக்கிறார்கள்.

'சி.பி.ஐயால் வழங்கப்பட்ட ஆதாரங்கள் வலுவானவையாக இல்லை என்பதால், வேறு வழியின்றி இவர்கள் விடுதலை செய்யப்படுகிறார்கள்' என்று நீதிபதி கூறியிருக்கிறார். இவ்வழக்கில் சி.பி.ஐ.யின் செயல்பாடு குறித்து மிகுந்த அதிருப்தியையும் அவர் தெரிவித்திருக்கிறார்.

'விஜயனைத் தாக்கியவர்களை அவர் அடையாளம் காண வசதியாக முறைப்படி மாஜிஸ்திரேட் முன்னிலையில் identification parade நடத்தவில்லை. மாறாக, குற்றம்சாட்டப்பட்டவர்கள் விஜயன் முன் நிறுத்தப்பட்டனர். ஊர்ஜிதம் செய்யும்படி விஜயனைக் கேட்டுக் கொண்டனர்.

குற்றம் சுமத்தப்பட்டவர்களுடைய வாக்கு மூலப் பிரதிகள் அழிக்கப்பட்டு விட்டதாக சி.பி.ஐ. தரப்பில் கூறப்படுகிறது. அவற்றின் ஆங்கில மொழியாக்கத்தின் நகல்களே நீதிமன்றத்தில் சமர்ப்பிக்கப்பட்டிருக்கின்றன!

இதுபோன்ற காரணங்களால் இந்த வழக்கில் சி.பி.ஐ. முறையாக, சீராகச் செயல்படவில்லை என்கிற முடிவுக்கே வரவேண்டியிருக்கிறது.' - சி.பி.ஐ.யின் அலட்சியப் போக்கு குறித்து நீதிபதி இவ்வாறு கருத்துச் சொல்லியிருக்கிறார்.

இதேபோன்ற தவறுகள், சி.பி.ஐ. விசாரித்து வரும் அனைத்திந்திய அளவிலான பல வழக்குகளில் நடந்துகொண்டேதான் இருக்கின்றன.




ஜனதா முக்தி மோர்ச்சா எம்.பி.க்கள் தொடர்பான வழக்கில், பல தொழிலதிபர்களிடம் பணம் பெற்றுத்தான் காங்கிரஸ் தலைவர்கள் இயங்கினார்கள் என்பதாக சி.பி.ஐ. கண்டறிந்தது. ஆனால் இவ்வழக்கில் குற்றப்பத்திரிகை தாக்கல் செய்தபோது அந்தத் தொழிலதிபர்கள் மீது குற்றச்சாட்டு ஏதும் பதிவு செய்யாமலே விட்டு விட்டது, சி.பி.ஐ.!

பீஹார் மாநிலம், மாட்டுத் தீவன ஊழல் வழக்கிலும் இதே கதைதான். லல்லுவுக்கு எதிராக இருந்த சி.பி.ஐ. அறிக்கையிலிருந்து சில பகுதிகளை நீக்கியதற்காக, அதன் தலைவர் ஜோகிந்தர் சிங்கை நீதிமன்றம் கண்டித்திருக்கிறது!

சி.பி.ஐ. போன்ற, நடுநிலை காக்க வேண்டிய ஓர் அமைப்பில் இப்படிப்பட்ட சறுக்கல்களும் தவறுகளும் நிகழ என்ன காரணம் என்பதை ஆராய வேண்டியிருக்கிறது.

உடனடியாக நமக்குப் புலப்படுபவை இரண்டு காரணங்கள் :

முக்கியமான ஒருசில வழக்குகளை மட்டும் ஆராய்ந்து வந்த சி.பி.ஐ. இப்போது ஏராளமான வழக்குகளை எடுத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. (அந்த அளவுக்குப் பொது வாழ்வில் ஊழல் மலிந்து போயிருக்கிறது!) வழக்குகளின் எண்ணிக்கை பெருகிவிட்டதால் புலனாய்வுப் பணிகள் அதிகரிக்க, சி.பி.ஐ. ஊழியர்களின் எண்ணிக்கையையும் அதிகரிக்க வேண்டிய நிர்ப்பந்தம். பொறுக்குமணிகளான அதிகாரிகளும் ஊழியர்களும் பொறுப்பேற்று நடத்திய அமைப்பு, திறமைக் குறைவானவர்களையும் பொறுப்பற்றவர்களையும் உள்ளே அனுமதிக்க வேண்டிய கட்டாயத்துக்குள்ளாகிறது. இதனால் அமைப்பே நீர்த்துப் போகிறது.

இரண்டாம் காரணம் : அரசியல் தலையீடு. சி.பி.ஐ. தனி அதிகாரங்கள் பெற்ற அமைப்புதான் என்றாலும் மத்திய அரசின் கட்டுப்பாட்டில்தான் செயல்பட்டு வருகிறது. எனவே அரசியல் தலைவர்களின் சௌகரியங்களுக்கும் விருப்பங்களுக்கும் ஏற்ப அந்த அமைப்பு வளைக்கப்படுகிறது; வளைந்து கொடுக்கிறது.




விஜயன் தாக்குதல் வழக்கில், விசாரணைக்குப் பின் விடுதலையான எஸ்.டி.எஸ். முதலானோர் கூட 'அரசியல் தலையீட்டினால் ஆதாயம் அடைந்தவர்கள்தானோ' என்கிற சந்தேகம் மக்கள் மனத்தில் எழாமல் போகாது.

'எஸ்.டி.எஸ்., ஜெயலலிதாவுக்கு எதிராகத் திரும்பி விட்டதால் ஆளுங்கட்சியின் ஆசி பெற்றவராகிறார்' என்றும் 'கூடவே ஆதி ராஜாராமையும் விடுவிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுமாதலால் எதிரணியின் வாயை அடைத்து விடலாம் என்கிற உள்நோக்கம் செயல்பட்டிருக்கிறது' என்றும் மக்கள் கணக்குப் போட்டால் ஆச்சரியமில்லை.

அரசின் கட்டுப்பாட்டில் இருக்கும் காவல்துறை, சில வழக்குகளில் நடுநிலையாக இயங்காமல் போகக்கூடும் என்கிற ஐயம் ஏற்படுமானால், அப்படிப்பட்ட தருணங்களில் நியாயமான விசாரணை நடத்தப்பட வேண்டும் என்கிற நோக்கத்தில் சி.பி.ஐ.யிடம் வழக்கு ஒப்படைக்கப்படுகிறது. அப்படியிருக்கையில், சி.பி.ஐ.யே அரசியல் செல்வாக்குக்குக் கட்டுப்பட வேண்டிய நிலை எவ்வளவு அபாயகரமானது!

அரசாங்கக் கட்டுப்பாடற்ற சுயேச்சை அமைப்பாக அதனை மாற்றி விடுவதிலும் அபாயங்கள் உள்ளன. ஒற்றாடல், புலன் விசாரணை போன்ற அதிகாரங்கள் பெற்ற அமைப்பு ஓர் யதேச்சாதிகார கேந்திரமாக மாறி, எல்லா தரப்பினரையும் மிரட்டி, குழப்பங்களையும் துன்பங்களையும் விளைவிக்கக்கூடும்.

எனவே இதை அனுமதிப்பதற்கில்லை. அரசியல்வாதிகளின் தார்மீக நெறிகள் மேலோங்கும் என்பதில்தான் நாம் நம்பிக்கை வைக்க வேண்டியிருக்கிறது. அவர்களுடைய செயல்பாட்டைக் கண்காணித்து நெறிப்படுத்தவும் சி.பி.ஐ. போன்ற சார்பற்ற அமைப்புகள் மெய்யாகவே நடுநிலையுடன் செயல்படுகின்றனவா என்று கவனித்துச் சீர்படுத்தவும் நீதித்துறைதான் உதவ முடியும்.

## எக்ஸ்நோரா வழக்கு :

# "மெட்ரோ ரயில் நிலையங்களை உடைக்க வேண்டும்!"

**ப**க்கிங்ஹாம் கால்வாயின் மீது கட்டப்பட்டிருக்கும் மூன்று மெட்ரோ ரயில்வே ஸ்டேஷன்களை உடைத்து எடுக்கும்படி, எக்ஸ்நோரா நிறுவனம், சென்னை துரித ரயில் திட்ட அதிகாரிகளுக்குக் கடிதம் எழுதியிருக்கிறது.

சேப்பாக்கம், லாயிட்ஸ் சாலை, மயிலாப்பூர் ஆகிய மூன்று மெட்ரோ ஸ்டேஷன்களுமே, கழிவு நீர் பாயும் பக்கிங்ஹாம் கால்வாயின் குறுக்கே கட்டப்பட்டிருக்கின்றன.

இம் மூன்று இடங்களிலுமே, கழிவு நீர் போவது தடைப்பட்டு, நாற்றம் குடலைப் பிடுங்குகிறது. ஸ்டேஷன் கட்டடத்துக்கு அடியில் தண்ணீர் போகலாமே என்று கேட்கலாம். லாயிட் ஃபவுண்டேஷன் முறையில், தண்ணீர் துளியும் போக முடியாமல் கால்வாயை அடைத்து இவை கட்டப்பட்டிருக்கின்றன!

பக்கிங்ஹாம் கால்வாய் மேல் வாகன - மக்கள் போக்கு வரத்துக்குக் கட்டப்பட்டிருக்கும் பாலங்கள் உயரத்துக்கு, தண்ணீர் போக வழி விட்டு, அதற்கு மேலே ஸ்டேஷன்களைக் கட்டியிருக்கலாமே என்பது எக்ஸ்நோராவின் வாதம்.

பிரச்னை இது ஒன்று மட்டும் அல்ல.

இப்படி மூன்று இடங்களிலும் ஸ்டேஷன்களைக் கட்டிய பிறகு, மழைநீர், தேங்கி சாலையைக் குளமாக்குவது அதிகமாகி விட்டது.

மயிலாப்பூர் சம்ஸ்கிருத கல்லூரி யையும், கார்ப்பரேஷன் மண்டல அலுவலகத்தையும் ஒட்டிய

• லாயிட்ஸ் ரோடு : பக்கிங்ஹாமை அடைத்துக் கொண்டு ஸ்டேஷன்...



பகுதிகளில் மழைக்காலத்தில் படகு வைத்துக் கொண்டுதான் போக வேண்டும். அந்த அளவுக்குத் தண்ணீர் தேங்கியது. பிருந்தாவன் தெருவாசிகள் இரண்டு பேர், தங்கள் வீட்டு காம்பவுண்டுக்குள் வேகத் தடை கட்டுவார்களே, அது போல தண்ணீர் உள்ளே வந்துவிடாமல் இருக்க, மெகா சைஸில் தடை கட்டி வைத்திருக்கிறார்கள்!

கால்வாயின் ஒரிஜனல் அகலம் சுமார் எழுபது முதல் எண்பது அடி வரை இருக்கிறது. ஸ்டேஷன்கள் கட்டப்பட்டிருக்கும் பகுதிகளில், இது குறுகிக் குறுகிப் போய், சுமார் இருபது அடிக்கு வந்துவிட்டது! தண்ணீர் போக இந்த அளவு போதுமே என்று இவர்கள் சொல்வதோடு, இதற்குப் புதிதாக இவர்கள் சூட்டியிருக்கிற பெயர் : பேபி கால்வாய்!

'ஸில்ட்' எனப்படும் கழிவுக் குப்பையை இந்தக் கால்வாயிலிருந்து எடுத்து இருபுறமும் கரை மீது கொட்டியிருக்கிறார்கள். கொட்டுகிற மழையில், இவை மறுபடி கால்வாயோடு கலந்து விடுகின்றன!



• சேப்பாக்கத்தில் பேபி கால்வாயான பக்கிங்ஹாம் கால்வாய்

கூவமும், அடையாறும் மேற்கிலிருந்து கிழக்கு நோக்கிப் பாய்கின்றன என்றால், பக்கிங்ஹாம் கால்வாய் வடக்கிலிருந்து தெற்கு நோக்கிப் பாய்கிறது. இது பிரிட்டிஷ் காலத்தில் கட்டப்பட்ட கால்வாய். (Man-made Canal) ஆந்திராவிலிருந்து மரக்காணம் வரை செல்லுகிறது. ஆந்திராவிலிருந்து அரிசி கொண்டு வர, படகுப் போக்கு வரத்துக்காகக் கட்டியது.

சென்னையில் இந்தக் கால்வாய் செல்லும் பகுதிகளில் கட்டப்பட்டிருக்கும் மழை நீர் வடிகால்கள் எல்லாம், பல வருடங்களுக்கு முன் கார்ப்பரேஷன் கட்டியவை. மழை நீர் போய்ச் சேர வேண்டிய வாய்க்கால்களின் அருகே குவிந்திருக்கும் 'ஸில்ட்'டின் உயரம் அதிகம். மழை நீர் வடிகால்கள் அமைந்திருப்பதோ, மிகத் தாழ்வாக. இதனால் ஏற்கெனவே மழைநீர் சரியாகப் போகாமல் தடைப்பட்டுச் சாலைகளில் தேங்கிவிடுகிறது. இப்போது எம்.ஆர்.டி.எஸ். ஸ்டேஷன்களால் பிரச்னை அதிகரித்துள்ளது.

முதலில் கழிவு நீர் போகும் அளவுக்கு வழி பண்ணிவிட்டு அல்லவா, ஸ்டேஷன்கள் கட்டும் வேலையை ஆரம்பித்திருக்க வேண்டும் என்கிறது எக்ஸ்நோரா. கால்வாய் குறுகி 'பேபி' யாகப் போன பிறகு, பக்கத்தில் உள்ள குடிசை வாசிகளைக் காலி பண்ணச் சொல்லியிருக்கிறார்களாம். குடிசைகளை எடுத்துவிட்டுக் கால்வாயை இன்னும் கொஞ்சம் அகலம் பண்ணுவார்களாம். லாயிட்ஸ் சாலை ஸ்டேஷன் அருகே நாம் விசாரித்த போது, 'சிலர் காலி பண்ணிக் கொண்டு போய் விட்டார்கள்' என்றார் ஒருவர்.

கட்டப்பட்டிருக்கும் ரயில்வே ஸ்டேஷன்களை உடைத்து, பழையபடி கழிவுநீர் தடைப்படாமல் போக வழி செய்கிற மாதிரி, பக்கிங்ஹாம் கால்வாயை அகலப்படுத்திக் கொடுங்கள் என்று எக்ஸ்நோரா தனது வழக்கறிஞர்

## எறும்பார் கடிக்கிறார்!

"அ.தி.மு.கவின் முன்னணித் தலைவர்களைப் பழிவாங்கி அவமானப்படுத்தும் முயற்சி இது..."

— மதுசூதனன் கைது குறித்து ஜெயலலிதா.



மூணு லட்சம் டாலர் எங்கேயிருந்து வந்ததுன்னு கண்டு பிடிக்க இன்டர்போல் உதவியை நாடியிருக்காங்களே அதை சர்வதேச சதின்னு சொல்லு வாங்களோ!

மோகன் மூலமாக நோட்டீஸ் அனுப்பி மூன்று மாதங்களாகி விட்டன. எம்.எம்.டி.ஏ., தமிழக அரசின் தலைமைச் செயலர், பொதுப் பணித் துறை, எம்.ஆர்.டி.எஸ். உயர் அதிகாரிகள் என்று எல்லோருக்குமே நோட்டீசுகளின் பிரதிகள் அனுப்பப்பட்டிருக்கின்றன.

"பொதுப் பணித்துறையின் பொறுப்பில்தான் இந்தக் கால்வாய்கள் இருக்கின்றன. தண்ணீர் தடைப்படாமல் போகவும் வரவும் பார்த்துக் கொள்ள வேண்டியது இவர்கள் கடமை. கட்டுமானத்துக்கு அனுமதி அளிக்கும் பொறுப்பை எம்.எம்.டி.ஏ. வைத்திருக்கிறது. மாசுக்கட்டுப்பாட்டு வாரியமும் இதில் சம்பந்தப்பட்டிருக்கிறது. இந்த அமைப்பு, சரியாகக் கவனித்ததா என்று தெரியவில்லை. எல்லா பெரிய திட்டங்களுக்கும் என்வயர்மென்டல் இம்பாக்ட் அஸஸ்மென்ட் (EIA) அனுமதி தேவை. இது சுற்றுச் சூழல் மற்றும் வனத்துறை அமைச்சகத்தால் வழங்கப்படுகிறது. இவையெல்லாம் என்னவாயிற்று?" என்று கேட்கிறார் வழக்கறிஞர் மோகன்.

அலைகளின் பாதிப்பு (Tidal Effect) ஏற்படக் கூடிய பகுதிகளில் இரண்டு புறமும் நூறு மீட்டர்கள் இடம் விட்டு விட்டுத்தான் கட்ட வேண்டும் என்று கோஸ்டல் ஸோன் சட்டம் இருக்கிற போது, நடுக் கால்வாய்களிலேயே எப்படி ஸ்டேஷன் கட்டலாம் என்று கேட்டிருக்கிறார் மோகன். இது எம்.எம்.டி.ஏ. அறியாததா?

தோல் பதனிடும் தொழிற்சாலைகள் வழக்கில் ஆஜராகி, சுற்றுச் சூழலை மாசுப்படுத்தும் தொழிற்சாலைகள் அனைத்தையும் மூட வேண்டும் என்று சுப்ரீம் கோர்ட்டில் வாதாடி வெற்றி பெற்ற வழக்கறிஞர் எம்.சி. மேத்தாவிடம், இந்த வழக்கை எடுத்துக் கொள்ள முடியுமா என்று கேட்பதற்காக, எக்ஸ்நோரா சார்பில் அதன் செயலர் தில்லி சென்றிருக்கிறார்.

"மத்திய அரசின் திட்டம் என்ற உடனேயே, பல விதிகளையும் கண்டு கொள்ளாமல், சில அத்துமீறல்கள் செய்யப்பட்டிருக்கின்றன!" என்கிறார் எக்ஸ்நோரா செயலர் வி.என். சுப்பிரமணியம்.

இது பற்றி பொதுப்பணித்துறை மற்றும் மெட்ரோ ரயில் உயர் அதிகாரிகளிடம் விசாரித்தபோது, "இப்போது கால்வாயை ஆழப் படுத்தி விட்டோம். இனி பிரச்னையே இருக்காது. மேலும் கால்வாய் ஓரங்களில் சுவரெழுப்பவும் இருக்கிறோம். இதுவொரு பாடம் என்பதால் இனி தரமணி போன்ற இடங்களில் கட்டும்போது இன்னும் எச்சரிக்கையாகச் செயல்படப் போகிறோம்!" என்றார்கள்.

— சித்தார்த்

படங்கள் : ஸ்ரீஹரி

---

"வச்சிருக்கறது என்னவோ சின்னதா ஒரு பெட்டிக் கடைதான்; ஆனாலும் அந்தாளுக்கு எவ்வளவு பந்தா பாருங்களேன்!"

"என்ன சொல்றீங்க?"

"எங்களுக்கு வேறு எங்கும் கிளைகள் இல்லை'ன்னு போர்டு வெச்சிருக்கானே!"



"என் காதலியை என் அம்மா கிட்ட அறிமுகப்படுத்தி வெச்சேன்!"

"என்ன சொன்னாங்க?"

"கொஞ்ச நேரம் சண்டை போட்டுப் பார்த்துட்டு ஓ.கே.ன்னு சொல்லிட்டாங்க!"

— வி. ரெங்கநாதன்



## எம்.ஜி.ஆர் காலத்தில் பரபரப்பாக அரசியல் நடத்திய ஜேப்பியார் இப்போது எங்கே?

சென்னை மாநகரின் புறநகர்ப் பகுதியான பெருங்குடியை அடுத்து பிரம்மாண்டமான 300 ஏக்கர் நிலம். சத்யபாமா இஞ்ஜினியரிங் கல்லூரி, செயின்ட் ஜோஸப் இஞ்ஜினியரிங் கல்லூரி என்று இரண்டு சுயநிதிக் கல்லூரிகள். மொத்தம் 4,500 மாணவர்கள். காம்பவுண்டுக்குள்ளேயே ஹாஸ்டல். தவிர சென்னை நகர மாணவர்கள் பல்லவனை நம்பி



# 'மாவீரன் ஜேப்பியார்' கல்வியாளர் ஆன கதை!

திண்டாடக் கூடாது என்பதற்காக கல்லூரிக்குச் சொந்தமான நாற்பத்தைந்து பஸ்கள்! அத்தனை மாணவ, மாணவிகளும் லஞ்ச் டப்பா சுமக்க வேண்டிய அவசியமில்லை. மதிய சாப்பாடு கல்லூரியில்!

இது தவிர, அமைந்தகரையில் பனிமலர் பாலிடெக்னிக் என்ற பெயரில் ஒரு ஐ.டி.ஐ-யும், ஏழை மாணவ, மாணவியருக்கு இலவசமாய் கம்ப்யூட்டர் கல்வி கற்றுத் தரும் ஒரு கம்ப்யூட்டர் மையமும் இருக்கின்றன.

இத்தனையும் நடத்தி வருபவர் ஜேப்பியார். ஆம்! முன்னாள் அ.தி.மு.க அரசியல்வாதியேதான்.

"வேண்டாங்க! எனக்கு அரசியல் வேண்டாம். என்னைப் பற்றி, நான் நடத்தி வரும் கல்வி நிலையங்கள் பற்றி எதுவானாலும் கேளுங்கள், சொல்கிறேன். அரசியல்வாதிகள் பற்றி என்னை தயவு செய்து எதுவும் கேட்காதீர்கள். நான் பதில் சொல்ல விரும்பவில்லை" என்று கூறும் ஜேப்பியாரிடம் விடாமல் கேட்டோம்.

"சொல்லுங்கள்... பிஸியான அரசியல்வாதியான நீங்கள் எதனால்

கல்லூரிகளை நடத்த வந்தீர்கள்?"

"எம்.ஜி.ஆர் காலத்திலேயே இந்த ஐடியாவுக்கு அஸ்திவாரம் போடப்பட்டு விட்டது. நாம் ஏதாவது உருப்படியான பணி செய்ய வேண்டும் என்று நினைத்தபோது, நாளைய தலைமுறையை நல்லவர்களாக, வல்லவர்களாக உருவாக்க, கல்லூரி ஆரம்பித்தாலென்ன என்று தோன்றியது. எம்.ஜி.ஆரை கலந்தாலோசிக்காமல் நான் எதுவுமே செய்ததில்லை. எனவே அவரைச் சந்தித்து, 'ஒரு இஞ்ஜினியரிங் கல்லூரி ஆரம்பிக்க ஆசைப்படுகிறேன். அதற்கு சத்யா இஞ்ஜினியரிங் காலேஜ் என தங்களது தாயார் பெயரையே சூட்ட வேண்டுமென்பது ஆசை' என்றேன்.

"அதற்கு எம்.ஜி.ஆர்; 'சத்யா இல்லை. சத்யபாமா என்பதே என் தாயாரின் பெயர்' என்றார். அவர் அப்படிச் சொன்னது எனக்கு ஆசி வழங்கியதாகி விட்டது. அதனால் கல்லூரி தொடர்பான மற்ற வேலைகளை மடமடவென்று கவனிக்க ஆரம்பித்து விட்டேன்.

" கல்லூரி ஆரம்பித்த சமயத்தில்கூட, நான் முற்றிலுமாய் என் அரசியல் தொடர்புகளைத் துண்டித்துக் கொண்டு விடவில்லை. ஆனால் தலைவரின் மறைவையடுத்து, கட்சியில் ஏற்பட்ட பிளவு, பின்னர் இணைப்பு இவைதான் என்னை அரசியலிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாய் விலக்கி வைத்தன."

"அரசியலிலிருந்து விலகி விட்டதற்காக, ஏதாவது ஒரு சமயத்திலாவது உங்களுக்குச் சிறிதளவேனும் வருத்தம் ஏற்பட்டிருக்குமே?"

"ஐம்பத்தைந்தில் நான் எஸ்.எஸ்.எல்.சி முடித்த சமயத்தில், தேர்தல் நிதி திரட்ட நாடகம் நடத்த வந்திருந்தார் எம்.ஜி.ஆர். அவரை எப்படியாவது என்னுடைய விரல்களால் தொட்டுப் பார்த்து விட வேண்டும் என்று எனக்குள் அடங்காத ஆர்வம். கூட்டத்தில் முட்டி மோதிக்கொண்டு, எம்.ஜி.ஆரை நெருங்கியபோது, அவர் பக்கத்திலிருந்த பாதுகாவலர்கள் என்னைக் கொத்தாக அள்ளி வெளியே தூக்கிப் போட்டு விட்டார்கள். நாற்பதாண்டுகளுக்கு முன், நாஞ்சில் நாட்டு மூலையில் நடந்த சம்பவம் இது.

"அதன்பின்னர், அரசியலில் ஈடுபட்டு, படிப்படியாக உயர்ந்து, என் வாழ்க்கையில் ஒரு இருபத்தைந்து ஆண்டுகாலம், எந்த எம்.ஜி.ஆரைப் பார்க்கப் போனபோது, தூக்கி எறியப்பட்டேனோ, அதே புரட்சித்தலைவருக்கு மிக நெருக்கமாய் இருக்கக்கூடிய அரிய வாய்ப்பு கிடைத்தது. இது எவ்வளவு பெரிய பாக்கியம்!

"வெறும் எஸ்.எஸ்.எல்.சி.யான என் மீது, அரசியல் காரணங்களுக்காக வழக்குகள் போடப்பட்டு, அடிக்கடி கோர்ட் படி ஏறி, இறங்க வேண்டியிருந்தது. ஒருநாள், நாமே வக்கீலுக்குப் படித்தால் என்ன? என்று நினைத்தேன். அடிப்படை பட்டப் படிப்பு கூட இல்லையே! திறந்தவெளி பல்கலைக் கழகத்தில் சேர்ந்து, எம்.ஏ. அரசியல் விஞ்ஞானம் முடித்தேன். அதன்பின் சட்டக்கல்லூரியில் சேர்ந்தேன். பிஸியான அரசியல் பணிகளுக்கு இடையில்தான் மாலை நேரங்களில் சட்டக் கல்லூரி வகுப்புகளுக்கும் போய்க் கொண்டிருந்தேன். வெற்றிகரமாய் படிப்பை முடித்து, நானும் கறுப்புக் கோட்டு அணிந்து கொண்டபோது, மிக மகிழ்ச்சியாக இருந்தது.' அதேபோல இப்போது செய்கிற பணியும் எனக்கு மிகவும் திருப்தியாக இருக்கிறது. அதனால் அரசியலிலிருந்து விலகி விட்டதற்காக எந்தவொரு சமயத்திலும் எனக்கு வருத்தமேற்பட்டதுமில்லை. ஏற்படப் போவதுமில்லை!" என்கிறார் ஜேப்பியார்.

சந்திப்பு : **எஸ்.சந்திரமௌலி,**

படம் : **ஸ்ரீஹரி**

---



"குரூப் டான்ஸ்' ஆடறவங்க கை, கால், தலை, உடம்புல பேர் ஸ்டிக்கர் ஒட்டியிருக்கே?"

"உதறி ஆடும்போது அதது உடம்பிலிருந்து பிய்ஞ்சுட்டா யார்துன்னு தெரிஞ்சுக்கத் தான்...!"

— சி.நாச்சிமுத்து

## கெ.டி.குஞ்சுமோன்

# “ஒரு நாளைக்கு இருபது தடவையாவது மனைவியோடு போனில் பேசுவேன்!”

“அச்சன் தோமஸுக்கு நாங்க மூணு பேர் பிள்ளைகள். வர்கீஸ் ராணுவ அதிகாரியாக இருந்து ரிடையர் ஆகிவிட்டார். ஜான் விவசாயத்தைப் பார்த்துக்கிட்டிருக்கார்” என்றார் கடைக்குட்டி குஞ்சுமோன்.

பிரிட்டிஷ் ஏர்வேஸில் கௌண்டர் ஸ்டாஃபாகப் பணியைத் தொடங்கி, பிறகு சொந்தமாக ட்ராவல் ஏஜென்ஸி நடத்தி, நடுநடுவே ஹோட்டல் ஒன்றின் உரிமையாளராகவும் இருந்து, கடைசியாக சினிமாத்



• குடும்பத்துடன் குஞ்சுமோன்...




துறையில் காலடி வைத்திருக்கிறார்.

"திரைப்படத் தயாரிப்பு என்பது ரிஸ்க்கான தொழில்..." நாம் முடிக்கும் முன் குறுக்கிடுகிறார் குஞ்சுமோன்.

"எதிலே ரிஸ்க் இல்லே? வாழ்க்கையே ரிஸ்க்தான். ரிஸ்க் இல்லேன்னா அது என்ன லைஃப்?" என்றார் கொஞ்சம் படபடப்பாக.

"அதில்லை. இப்படியொரு ரிஸ்க்கான துறையில் நீங்கள் இறங்கியபோது உங்கள் மனைவி அதற்கு முழு சம்மதம் தந்தார்களா? என்று கேட்க வந்தோம்".

"அவ என் சொல்லுக்கு மறு பேச்சு பேச மாட்டா. தவிர மத்த யாருடைய ஆலோசனையையும் நான் கேட்டுக்க மாட்டேன். ஆண்டவன் என் மனசிலே தோணி என்ன சொல்றாரோ அதுதான் ஃபைனல். இதனால்தான் நான் தயாரிக்கும் படங்களுக்கு மத்தவங்க பேச்சைக் கேட்காம, புது டைரக்டர்கள், புது டெக்னிஷியன்கள் பல பேரை செலக்ட் செய்றேன். தவிர அப்படிப்பட்டவங்கதான் நான் சொல்றதுக்கு மதிப்புத் தந்து நம்ம கண்ட்ரோலில் இருப்பாங்க இல்லையா? எப்படியோ இதுவரை என் பாதையிலே எந்தவித விபத்தும் ஏற்படலே" என்று தன்னம்பிக்கையோடு குஞ்சுமோன் சொன்னாலும் அவருக்கும் ஒரு விபத்து ஏற்பட்டிருக்கிறது- காதல் விபத்து!

காதல் திருமணம்தான். ஆனால் கொஞ்சம் வித்தியாசமான திருமணம்.

"எர்ணாகுளம் மெடிகல் ட்ரஸ்ட் ஹாஸ்பிடலிலே ஜரின் வரவேற்பாளராக இருந்தாங்க. அங்கே அட்மிட் ஆகியிருந்த நண்பன் ஒருவனைப் பார்க்கப்போனபோது, ஜரின் கண்ணிலே பட்டாங்க. அந்த முகத்தில் ஏதோ அட்ராக்ஷன் தெரிந்தது. அவங்களைத்தான் கல்யாணம் செய்துக்கணும்னு அந்த நிமிஷமே தோணிச்சு. சிநேகிதனை விட்டு அவங்க வீட்டிலே பேசச் சொன்னேன்.

"இவ்வளவு பணக்கார சம்பந்தம் தங்களுக்கு சரிப்படுமா?ன்னு யோசிச்சாங்க. பேசி சம்மதிக்க வச்சேன். மொத்த கல்யாணச் செலவையும் நானே ஏத்துக்கிட்டேன்" என்ற குஞ்சுமோன் லேசான கூச்சத்துடன், "கல்யாணத்துக்கு முன்னே நாங்க அடிக்கடி சந்திச்சதுண்டு. ஆனால் அத்தனை மீட்டிங்கும் அவ வேலை செய்யற மருத்துவமனையிலேதான். மற்றபடி தனியிடங்களில் சந்தித்துக் கொண்டதில்லை".

இப்போது இவர்களுக்கு இரண்டு வாரிசுகள். பெரியவர், மகன் எபி. சுறுசுறுப்பாக சினிமாவுக்காகத் தயார் செய்யப்பட்டு வருகிறார். பரதம், குச்சுப்புடி, நீச்சல் இப்படிப் பல பயிற்சிகள். "என் தினசரி ரொட்டீனிலே எனக்கு அதிகம் பிடித்தது அதிகாலையில் மெரினாவில் செய்யும் குதிரைப் பயிற்சியும், வீட்டுக்கு வந்து ஆசிரியர் நடத்தும் ஜிம்னாஸ்டிக் பயிற்சியும்" என்கிறார் பதினேழு வயது எபி. "அடுத்த வருடம் அவனை தமிழ் திரையுலகத்திலே ஹீரோவாக அறிமுகப்படுத்த இருக்கிறேன்'' என்றார் குஞ்சுமோன் விவரமாக.

இதெல்லாம் சரி, படிப்பு? "பிரைவேட்டாக பத்தாவது படிக்கிறான்'' என்ற ரத்னச் சுருக்கமான பதில் வந்தது.

"எபியும் நானும் ஒண்ணாத்தான் சாப்பிடுவோம். வாராவாரம் ஊருக்குப் போகும் போதெல்லாம் என்னைக் கட்டிப் பிடித்து முத்தம் கொடுத்துத்தான் செண்ட்- ஆஃப் செய்வான். இரு நண்பர்கள் போலத்தான் நாங்கள் பழகுவோம் ("உண்மை"- எபி). ஆனா சிகரெட் கூடாது. தண்ணி அடிக்கக் கூடாது. பெரியவங்ககிட்டே ரொம்ப மரியாதையாக நடந்துக்கணும். இது மாதிரி கட்டுப்பாடுகளிலே ரொம்ப ஸ்ட்ரிக்டாக இருப்பேன்".

**வா**ராவாரம் எந்த ஊருக்குப் போகிறார்? சொந்த ஊருக்குத்தான். பதினாறு வருடங்களுக்கு முன்பே சென்னையில் குஞ்சுமோன் செட்டிலாகி விட்டாலும் அவர் மனைவி, மகள் பீபிதாவோடு கேரளாவில்தான் வசிக்கிறார். ஐயப்பனின் பிறப்பு இடமான பந்தளத்தின் அருகிலுள்ள தும்பமன் என்கிற இடத்தில்தான் குஞ்சுமோனின் குடும்ப சொத்துக்கள் இருக்கின்றன.

"எனக்குச் சோறு போட்டுக் கொண்டிருப்பது தமிழ் ரசிகர்கள்தான். அதனாலே தமிழ் ரசிகர்கள் மேலே எனக்குப் பாசம்தான். ஆனால் மனைவிக்கு கேரளாவின் நேடிவிடியை விட மனசில்லே. தவிர சொத்துக்களையும் அவங்க நிர்வாகம் செய்ய வேண்டியிருக்கு."

தமது மனைவி மிகவும் கடவுள் பக்தி மிக்கவர் என்பதில் ஏகப்பட்ட பெருமை குஞ்சுமோனுக்கு. தவிர தம் குணத்துக்கு நேர்மாறான அமைதியான போக்கு மனைவியிடம் இருப்பதிலும் ரொம்ப திருப்தி.

''வாழ்க்கையிலே எனக்கு ரொம்ப முக்கியமானது கடவுள் பக்தியும் தொழிலும் குடும்பமும்தான். அன்னை வேளாங்கன்னி எனக்கு இஷ்ட தெய்வம். என் குடும்பத்துடன் எனக்குள்ள அட்டாச்மென்ட்டும் ரொம்ப அதிகம்'' என்றவர் மேஜையில் பெரிதுபடுத்தி வைக்கப்பட்டிருந்த தமது குடும்பப் புகைப்படத்தைக் காட்டினார்.

''எப்பவும் இவங்களைப் பார்த்துக்கிட்டே இருக்கணும் எனக்கு. வாரம் ஒருமுறை ஊருக்குப் போய் மனைவி, மகளை சந்திச்சிட்டு வருவேன். அப்பப்போ மகாபலிபுரம் போவதுண்டு. போன வருடம்கூட இஸ்ரேல் போய் ஏசுநாதர் பிறந்த இடத்தைத் தரிசனம் செய்துட்டு வந்தோம்.''

தினமும் இருபது தடவையாவது தமது மனைவியோடு போனில் பேசிக் கொள்வாராம்! ''இந்த விஷயத்தில் நான் ஒரு 'போனடி மன்னன்' (!) என்றார் பெருமையாக.

**ஊ**ரில் ஏழாவது வகுப்பு படித்துக் கொண்டிருக்கும் பீபிதா ரொம்ப கறுகறுப்பாம். சின்னச் சின்ன கலாட்டாக்களைக் குறைவில்லாமல் செய்து கொண்டிருப்பாளாம். (''அவளுக்கும் ரொம்ப கடவுள் பக்தி உண்டு''). அவள் அவ்வப்போது கேட்கும் பாவைகளை (பொம்மைகள்) தவறாமல் வாங்கிக் கொண்டு போவாராம்.

மகளைத் திரையுலகில் அறிமுகப்படுத்தப் பல வருடங்களாகவே திட்டமிட்டிருக்கும் குஞ்சுமோன், மகளை....?

''பட்டப்படிப்பு முடிச்சதும் அவளை ஏதாவது நல்ல இடத்தில் கல்யாணம் செய்து கொடுத்திடுவேன்.''

திரையுலகில் கொஞ்சம் ஒழுக்கமீறல்கள் அதிகம் என்பதுதான் பொதுவான கருத்து. இதனால் குஞ்சுமோனின் மனைவி அவரை ஏதாவது எச்சரித்ததுண்டா?

''நான் வித்தியாசமான தயாரிப்பாளர். ஷூட்டிங் ஸ்பாட்டுக்குக் கூட போக மாட்டேன். என் ஆபீஸ் உண்டு, வேலை உண்டு. போன் உண்டுன்னு இருப்பவன் நான். தவிர எங்களுடையது காதல் திருமணம். நம்பிக்கை அஸ்திவாரம் பலமாய் இருக்கிறது!'' என்றார் தம்முடைய பிரம்மாண்டமான மீசையைத் தடவியபடி.

''அப்பா, அம்மா எனக்கு தெய்வம் போல. அப்பாவின் விருப்பத்துக்கு எதிராக எதுவும் செய்ய மாட்டேன்'' என்ற எபியிடம், ''பெரிதாக மீசை வளர்த்துக் கொள்வீர்களா?'' என்றோம்.

''ஊஹூம். க்ளீன்-ஷேவிங்தான்'' என்று அவசரமான பதில் வந்தது!

—அருண் சரண்யா



''பகல் வாட்ச்மேன் வேலை பார்க்கிறதுலே மரியாதையே கிடையாது''

''எப்படிச் சொல்றீங்க?''

''எல்லாரும் 'டே வாட்ச்மேன்'னு சொல்றாங்க''

—தேனி முருகேசன்



''என்னது, உனக்கு சமைக்கத் தெரியாதா? உங்கப்பா நீ நல்லா சமையல் பண்ணுவேன்னு சொன்னாரே?''

''ஆயிரம் பொய் சொல்லித்தாங்க ஒரு கல்யாணத்தை நடத்த முடியும்...''

''அய்யய்யோ, அப்ப தொள்ளாயிரத்து தொண்ணூற்றொன்பது பொய் பாக்கி இருக்கா?''

—கோ.வி.செல்வகுமரன்



''உங்க வீட்டுக்கு விருந்தாளிங்க வந்தா... ஒரே நாள்ல போயிடுறாங்களே... எப்படி....?''

''அது ஒண்ணுமில்லே... வந்தவங்கிட்ட... என் மனைவி நூறு.. இருநூறு கடன் கேட்பா... அதான்!...''

—சிற்பி சோமு

2

சென்ற வாரம்...

# பிரபஞ்சன்

நேரு காலனி குடியிருப்புப் பகுதியில் வசிக்கிற சபேசனின் புது மனைவியாக அனு வருகிறாள். ஜானு மாமி, வள்ளி, காலனி செகரட்ரி சுந்தா ஆகியோர் அவளிடம் வந்து அறிமுகப்படுத்திக் கொண்டு உதவுகிறார்கள். பல குடும்பங்கள் இணைந்து வசிக்கும் அந்தக் காலனியில் வசிக்கிற ஓர் இளம்பெண் - ஜனனி. ஒருநாள் காலை தன் காதலன் ஆல்பர்ட்டைச் சந்திக்க அவசரமாக மவுண்ட்ரோடு விரைகிறாள். அவன், "வருகிறாயா, மகாபலிபுரம் போகலாம்?" என்று கேட்க, இவள் பயப்படுகிறாள். பரஸ்பர நம்பிக்கையின்மை பற்றிய விவாதம் தொடங்க, இருவரும் இலேசான வருத்தமுடன் திரும்பிப் போகிறார்கள். இனி...

சுந்தா சார் என்கிற சுந்தர மூர்த்தியை, சன் டி.வி.க்காக வீரபாண்டியன் இன்னும் பேட்டி காணவில்லை. காரணம், சுந்தா சார் பேட்டி காணத் தக்க பிரமுகரா என்பதில் அவருக்குச் சந்தேகம் இருக்கலாம். அப்படி ஒரு பேட்டி நிகழுமானால், சுந்தா சாரின் பதில் என்னவாக இருக்கும் என் பதில் சந்தேகம் இருக்காது.

வீரபாண்டியன் : வானத்துக்குக் கீழே நீங்கள் யாரை அதிகம் வெறுக்கிறீர்கள்?

சுந்தா சார் : (முகம், சிவக்க, பல்லை நறநறவென்று கடித்தபடி) இரண்டு பேரை நான் உலக விளிம்பு வரைக்கும் வெறுக்கிறேன். ஒன்று, தூங்குமூஞ்சி மரம். இரண்டு, தூங்குமூஞ்சி வாட்ச்மேன் வரதராசு.

வீரபாண்டியன் : மரத்தைக் கூட மனிதன் வெறுக்க முடியுமா, என்ன?

சுந்தா சார் : சுத்த விளங்காத ஆளா இருக்கிறீரே? மரம்னா, மரியாதையா ஒரு ஓரமா நின்னா சரி; அதை விட்டுட்டு சருகு,



# பூக்கள் நாளையும் மலரும்

செத்தைன்னு வீதியைக் குப்பை பண்ணிட்டிருந்தா என்ன அர்த்தம்...?

சுந்தா, வாட்ச்மேன் வரதராகவிடம் இரைந்து கொண்டிருந்தார்.

"இங்க என்னடா குப்பை? இதை எவன் சுத்தம் பண்றது? உன் அப்பனா? காலனிக்குள்ளே, ஒரு தூசு தும்பு இருக்கப்படாதுன்னு சொல்லி இருக்கேனா இல்லையோ? மூடமே... நிர் மூடமே. எத்தனை வாட்டி சொல்றது? இரு... இரு... இந்த மாசச் சம்பளத்துல, பத்து ரூபாய் 'கட்' பண்ணிடறேன். அப்போதான் புத்தி வரும்."



வரதராச, ஏதோ ஊமைப்படம் பார்ப்பது மாதிரி, அவரையும், அவரது அங்கசேஷ்டை களையும் கவனித்துக் கொண்டிருந்தான். இந்தக் காலனியில் வேலைக்குச் சேர்ந்த பன்னிரண்டு வருஷ காலமாக அவன் அவரைப் பார்க் கிறான். சுந்தா சார், கத்துவார். குடிகாரப் புரு ஷன் மாதிரி சத்தம் போடுவார். அவன், அனு பவசாலியான மனைவியைப் போன்றவன். இப்படித்தான் அவர்கள் 'சம்சாரம்' நடந்து கொண்டிருந்தது. அவரை வசியப்படுத்தும் கலை அவனுக்கும் தெரிந்துதான் இருந்தது. அவ்வப்போது அவன் அதைப் பிரயோகிக்கத் தவறுவதில்லை.

"சாமி...."

"என்னடா?"

"நேத்து ஒருத்தரு, ரீஜன்டா, கார்ல வந்தாரே, யார் சாமி அது?"

திடுமென, உலை அடங்கியது போல, இயல்பு நிலைக்குத் திரும்பினார், சுந்தா சார். ரோஜா பழம் மாதிரி, அவர் முகம் மென்மை அடைந்தது. புத்தனின் கருணாரசம், அவர் கண்களில் குடிகொண்டது. கீழ் சட்ஜத்தில் பேசத் தொடங்கினார்.

"அதுவா... வரது? எங்க ஆபீஸ் சிப் அக் கௌண்டன்ட். ஏதோ கணக்கு உதைக்கிறது. அண்ணா, நீங்கதான் சொல்யூஷன் சொல் லணும்னுட்டு, காரைப் போட்டுட்டு வந்துட் டன். படிப்பு கிடிப்பு எல்லாம் பெரிசுதான். பாரின் ரிட்டர்ன். என்ன பண்ண? தேமேன்னு வந்து நிக்கிறான். ரெண்டு நிமிஷத்துல முடிச்சு கொடுத்து அனுப்பி வச்சேன். ரிட்டயர்ட் ஆயாச்சுன்னு பேர். இன்னும் எங்க ஆபீசுல, சுந்தாதான் எல்லாம். என்ன படிப்போ, என்ன இழவோ, போ..."

இதுபோன்ற தருணங்களில், சுந்தா சார். ரதத்தில், பார்த்தசாரதியாக நிற்பார். எதி ராளிகள் எல்லாம் அர்ஜுனர்கள். அவர் சொல்வது சுந்தா கீதை.

வரது, நாசுக்காகத் திசை திருப்பினான்.

"ரெண்டாம் பிளாக்குல, 24-ல் சபேசன்னு ஒருத்தர் குடிவந்திருக்காரே, சாமி, பார்த் தீங்களா?"

"அடடா... மறந்தே போச்சு... தோ ஒரு நடை போய் பார்த்துட்டு வந்துடறேன். நீ போய், மாமிகிட்டே ஒரு தம்ளர் காப்பி வாங்கிக் குடிச்சுட்டு வந்து வேலையைப் பார்..."

சுந்தா சார், சபேசனைப் பார்த்து, தன்னை வெளிப்படுத்திக் கொள்ளக் கிளம்பினார்.

**பொ**ன் மஞ்சள் வாழை இலையில், சின்னச் சின்ன நிலாக்குட்டிகளைப் போன்ற இட்டலிகளை எடுத்துப் பரப்பி, சட்னியையும் போட்டு, "சாப்பிடுங்கள்" என்றாள் வள்ளி. சபேசன், கூச்சப்பட்டுக் கொண்டு சொன் னான்.

"உங்களுக்கு எதுக்குச் சிரமம்" என்றான் உபசாரமாக. அனுவும் கூட, ஆச்சர்யப்பட்டுக் கொண்டு நின்றாள்.

"இதிலென்ன சிரமம். எங்களுக்குப் பண்ணி னது, உங்களுக்கும் ஆச்சு... சிரமத்தை ஏத்துக்க றதிலேதானே சினேகம் இருக்கு?"

அனுவையும் அமரவைத்து, பரிமாறினாள் வள்ளி. ஒரு வழியாகச் சபேசன், அலுவலகம் சென்றான். கதவைச் சாத்திக் கொண்டு வந் தாள் அனு.

"சரி, சாமான்களை அடுக்குவோமா?"

சாக்குமூட்டைகளைப் பிரித்து, பாத்திரங் களை வெளியில் எடுத்து வைத்தாள், அனு. வள்ளி, துடைப்பத்தை எடுத்து, அடுப்பறை யைச் சுத்தப்படுத்தினாள். கீழே இறங்கிச் சென்று, ஸ்டோர்சில், பழுப்புக் காகிதம் வாங்கி வந்து, அளவாக வெட்டிப் போட்டுச் சாமான் களை அடுக்கி வைத்தாள்.

"இதெல்லாம் உங்க அம்மா வீட்டுல கொடுத்ததா, அனு?"

"ஆமாங்க, வள்ளி. இவர், எதுவும் வரதட் சணையே கேக்கலை. அதனாலேயே, எங்க அப்பா நிறையவே செய்துட்டார்."

"பரவா இல்லையே. இன்ஜினீயராக இருந்துக்கிட்டு, வரதட்சணை கேக்கலையே... ஆச்சர்யம்தான். உங்க வீட்டுக்காரர் ஆயிரத் துல ஒருத்தர்தான்."

"நீங்க இப்படிச் சொல்றீங்க. சில பேர், அசடுன்னும் சொல்றாங்க."

"அசடுன்னா!"

"வேற என்ன? எங்க குடும்பம் வசதியானது தானே? நான், ஒற்றைக்கு ஒரு பெண். என்ன கேட்டாலும் கொடுத்திருப்பாங்க. பத்து லட்சம் வேணும்னு கேட்டு வாங்கி, பேங்க்ல போட்டு வச்சா, நாளைக்கு எங்க குழந்தைகள் செலவுக்கு ஆகும் இல்லையா? கேட்டா, அது அவ மானம்ங்கிறார் இவர். என் பிள்ளைகளுக்கு நான் சம்பாதிச்சு சௌகர்யம் பண்ணணும். அதையும் மாமனார்கிட்டே கேட்கிறது, கௌரவம் இல்லைங்கறார். பைத்தியக்காரத் தனம் இல்லையோ, இது?"

வள்ளி, கண்ணாடியைக் கழற்றித் துடைத் துப் போட்டுக் கொண்டாள். அனு, சாதாரண மாகக் கேட்டாள்.

"உங்க வீட்டுக்காரர், எவ்வளவு கேட்டார்?"

வள்ளி சிரித்தாள். வள்ளி சிரித்தால், ஒரு கோலி குண்டை வைக்கலாம் போல, கன்னத் தில் குழி விழும். நகங்களைப் பார்த்துக் கொண்டு சொன்னாள். பவழம் போல், இயற் கையில் சிவந்த நகங்கள். வெங்காயத் தோலி யைப் பிய்த்து ஒட்டவைத்த மாதிரி. அழுக்கற்ற, அடக்கத்துடன் வெட்டப்பட்ட நகங்கள்: எதுவும் பதவிசாய் இருக்க வேண்டும் வள்ளிக்கு. பாவாடை, புடைவைக்கு வெளியே தலைகாட்டக்கூடாது. அதுவும், ஓரம் அழுக் கில்லாமல் இருக்க வேண்டும். குதிகால், வெள் ளையாய், வெடிப்பற்றும் இருக்க வேண்டும்.



இப் புகைப்படத்தில் காணும் எண்ணற்ற குழந்தைகள் சிவானந்த குருகுலத்தில் சேர்க் கப்பட்டு அன்பும், அரவணைப்பும் கிடைக்கப் பெற்று இலவச கல்வி, உணவு, உடை, இருக்க இருப்பிடம் அளிக்கப்பட்டு தங்களுடைய கருணையால் அமைதியான சூழ்நிலையில் வளர் கின்றனர்.

இப்படிப்பட்ட எண்ணற்ற சிறார்களுக்கு மனமகிழ்ச்சி தருவது தங்களுடைய அன்பும், ஆசியும், பொருளுதவியும்.

வருகின்ற தீபாவளித் திருநாளை புத்தாடை, இனிப்பு, பட்டாசுகளுடன் சிறப்பாக கொண் டாட உங்கள் உதவியை நாடுகிறோம். இத்தீபாவளித் திருநாளை தங்கள் குடும்பத்தாருடன் மகிழ்ச்சியுடனும், குதூகலத்துடனும் கொண்டாட எங்கள் பிரார்த்தனையுடன் மகிழ்ச்சியையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

சிவானந்த ஆசிரமத்திலுள்ள சுமார் 200 ஆதரவற்ற குழந்தைகளும், முதியோர்களும் இந்தத் தீபாவளி திருநாளை மகிழ்ச்சியுடன் கொண்டாட பொதுமக்கள் மனமுவந்து உதவுமாறு வேண்டுகிறோம். இதனைப் படிக்கும் தாங்கள் தங்களுடைய காணிக்கையாக ஒவ்வொருவரும் குறைந்தபட்சம் தலா ஒரு ரூபாய் இவ்வறப்பணிக்கு அர்ப்பணம் செய்தால், இத்திருப்பணி தங்கள் ஆசியுடன் பரிபூரணமாக நிறைவேறும் என்பதோடல்லாமல் இந்நாட்டில் உள்ள அனைத்து ஆதரவற்றோரும் பயன்பெறுவர்.

**சிவானந்த ஆசிரமத்திற்கு அளிக்கப்படும் நன்கொடைகளுக்கு வருமானவரி இலாகாவின் பிரிவு 80G படிவத்தின்படி விலக்கு சான்றிதழ் உண்டு.**

பொதுமக்கள் அன்புடன் அளிக்க விரும்பும் நன்கொடை - பணம், பொருள் எதுவாக இருந்தாலும் இக் குழந்தைகளின் நலனை முன்னிட்டு ஏற்றுக் கொள்ளப்படும். பொதுமக்கள் தங்களால் இயன்ற உதவியை பணமாக அல்லது பொருட்களாக.

நிர்வாகி,
"சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்"
நெ. 20 கம்பர் தெரு,
கிழக்கு தாம்பரம்,
சென்னை - 600 058.
தொலைபேசி எண்கள் : 2369078, 2369444.

"என்ன கேட்டீங்க? என் வீட்டுக்காரர் எவ்வளவு வாங்கினார்னா? நாங்க சுமாரான வசதிதான். எங்க வீட்டைப் பெயர்த்து எடுத்துட்டு வர முடியலை இவராலே. மற்றபடிக்கு, என் கல்யாணத்துக்குப் பிறகு, எங்க குடும்பத்துக்கு ஏகத்துக்குக் கடன். அப்பாவுக்கு இதனாலேயே பி.பி. இன்னும் ரெண்டு தங்கைகள் இருக்கு. ரெண்டு பேரும் படிக்கிறாளுங்க... போகட்டும்... வாங்க. பூஜை அறையை ஒழுங்கு பண்ணலாம்..."

அனு, சகல கடவுளர்களின் படங்களும் வைத்திருந்தாள். ஆண், பெண் கடவுளர்கள். யாருக்கும் வருத்தம் ஏற்பட எந்த நியாயமும் இல்லை. சம அளவில் சட்டமிட்ட சாமிகள். பணம் காசைப் பொழிகிற லட்சுமி; வெள்ளைத் தாமரைக் கலைவாணி; இமவான் புத்ரி; திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள்; பச்சைமா மலை போல் மேனிப் பரந்தாமன்; வேழமுகத்து விநாயகன்; ஏறு மயில் ஏறி விளையாடும் முகத்து முருகன். கூடுமானவரை, ஆணி அடிப்




பதைத் தவிர்த்து, அப்படங்களை இடம்பெறச் செய்தாள், வள்ளி. வேலை முடிந்து கூடத்துக்கு வந்து அமர்ந்தார்கள் அவர்கள்.

"வரலாமோ, உள்ளே" என்று குரலைக் கேட்டு, வள்ளி சொன்னாள்.

"வாங்க, மாமி. உள்ளே வாங்க..."

ஜானு மாமி உள்ளே நுழைந்தாள். முண்டகம் செய்திருந்த தலையைத் தலைப்பால் போர்த்தியிருந்தாள், மாமி. சுக்கு மாதிரி உலர்ந்த உடம்பு. நிரந்தரமாகத் தங்கி இருக்கும் முகத்துப் புன்னகை, எவரையும் சிநேகம் கொள்ள அழைக்கும்.

மாமி உள்ளே வந்தாள்.

"யார் வள்ளியா? அதானே பார்த்தேன். இந்தக் காலனியிலே, யாருக்காவது 'ஹெல்ப்' தேவைப்படும்னா, அங்கே ஜானு இருப்பா, வள்ளி இருப்பா... உன் பேரென்னம்மா, அனுசுயாவா, அனு... 'செட்டில்' ஆயிட்டையா?"

"பாதி ஆனாப்போலத்தான்."

"மீதிக்கு நாங்க இருக்கோமே... காப்பி எல்லாம் ஆச்சோடி வள்ளி? இல்லையா? பேசிண்டிருங்கோ... நான் போட்டுக் கொண்டு வர்றேன்."

மாமி, சுதந்திரமாகச் சமையல் அறைக்குள் நுழைந்தாள். அவளுக்கு உதவும் பொருட்டு அனுவும், சமையல் உள்ளுள் நுழைந்தாள். தனிமையில் விடப்பட்ட வள்ளிக்குத் தன் கணவன் பற்றிய நினைவு கிளர்ந்தெழுந்தது. அடிக்கடி எழுகிற நினைவுதான்..

முகம் தெரியாத மனிதர், முன்னே போகிறார். அவர் கையில் ஒரு சங்கிலி. அந்தச் சங்கிலியின் மறுமுனை, அர்த்தநாரியின் கழுத்தில் கட்டப்பட்டுள்ளது. அர்த்தநாரிக்குத் திடுமென வால் முளைக்கிறது. அது ஆடுகிறது. அவன், சங்கிலி போட்டு அழைத்துச் செல்பவரைத் தொடர்கிறான். அந்த நபர், யாரென்பதை உற்றுப் பார்த்தால் மட்டும் தெரிகிறது. அந்த நபர் – பணம்.

"என்ன தானா சிரிச்சுக்கிறே, வள்ளி" என்றபடி காப்பித் தம்ளரோடு வந்தாள் ஜானு மாமி. மூவரும், காப்பி பருகினார்கள்.

"அனு... ஹனிமூனுக்கு எங்கெல்லாம் போனே, சொல்லு..."

அனுவுக்குத் தூக்கிவாரிப் போட்டது. மாமியிடம் இந்த மாதிரி கேள்வி! சமாளித்துக் கொண்டு சொன்னாள்.

"முதலில் தண்டையார்பேட்டை. அப்புறம் திருவொற்றியூர். ஒருநாள் மதுரவாயில். ஒருநாள் ராயப்பேட்டை."

"என்ன சொல்றே?"

"ஹனிமூன்னு பணத்தை வேஸ்ட் பண்ண வேணாம். எல்லா இடத்துலயும் நிலா ஒன்றுதானே? எங்கே போனாலும், நாம் நாம்தானே? அப்படின்னு இவர், சொந்தக்காரங்க வீட்டு விருந்துக்கு அழைச்சுக்கிட்டுப் போனார். அவ்வளவுதான்."

மாமிக்குச் சிரிப்பு தாங்கவில்லை.

"இப்படியும் உண்டுமா? ரொம்ப வித்தியாசமான மனுஷர், உங்க வீட்டுக்காரர்."

"என்ன வித்தியாசமோ? ஒரு சினிமாவுக்குக் கூட இன்னும் கூட்டிப் போகலை."

வள்ளி, உதட்டுக்குள் சிரித்துக் கொண்டாள். வள்ளியின் சிரிப்பு, பல் தெரியாத, கண்ணாடிக்குள்ளிருக்கும் கண்களால் சிரிக்கிற சிரிப்பு. மாமி அதைக் கண்டுகொண்டாள்.

"என்னடி சிரிப்பு?" என்றாள்.

"மாமி. உங்க தேனிலவைக் கொஞ்சம் சொல்லுங்களேன். நான்தான் டீவி. காரியாம். நீங்கதான் மலரும் நினைவுகள் சொல்ற நட்சத்திரமாம்... எங்கே சொல்லுங்கள்."

மாமியின், ஏற்கெனவே சிவந்த முகம், மேலும் குங்குமக் கரைசல் ஆயிற்று.

"எங்களுக்கேதடி தேனும், நிலவும்? எனக்குக் கல்யாணம் ஆறச்சே, பத்து முடிஞ்சு பதினொன்னுதான் வயசு..."

சற்று நேரம் அமைதியாக இருந்துவிட்டு

மாமி சொன்னாள்.

''மாமாவோட பல்வரிசை இத்தனை அழகுன்னு, அவர் செத்துக் கிடந்தப்போ தாண்டி, நான் முழுசா பார்த்தது...''

ஜனனி, மிகவும் ஜாக்கிரதையாகத் தன்னை அலங்கரித்துக் கொண்டாள். அப்பா, நல்ல வேளை, ஏதோ கல்யாணம் என்று கிளம்பிப் போய் விட்டார். இல்லையானால், ரொம்ப நாளாகப் போட வேண்டும் என்று ஆசைப்பட்ட ஜீன்சைப் போட்டுக் கொள்ள முடியுமா, என்ன? சுந்தாவுக்கு, பெண்கள் என்பவர்கள் புடைவை கட்டுபவர்கள். ஆண்கள் என்பவர்கள் வேஷ்டி கட்டுபவர்கள். ஆபீஸ்காரர்கள் வேண்டுமானால், தொலையட்டும். பேண்ட் அணியலாம். பெண்கள், சூடிதாரோ, பேண்ட்டோ அணிவது என்பது அவரைப் பொறுத்தவரை லஜ்ஜை கெட்டதனம். தேவகி அப்படி இல்லை. குழந்தை ஆசைப்பட்டது, எதையாவது அணிந்து கொள்ளட்டும் என்று நினைப்பவள் அவள். வெள்ளைச் சட்டையை 'இன்சர்ட்' பண்ணிக் கொண்டாள். அம்மாவுக்கு முன் போய் நின்றாள்.

''எப்படிம்மா இருக்கு?''

தேவகி, மகிழ்ச்சியுடன் சிரித்துக் கொண்டு சொன்னாள்.

''ரொம்ப அழகா இருக்கே...'' என்றபடி, தன் கழுத்தில் அணிந்திருந்த சின்ன செயினை கழற்றி மகளுக்குப் போட்டு விட்டாள். கழுத்துக்கும், முதல் பட்டனுக்கும் இடையே, இறுக்கிப் பிடித்துக் கொண்டு, அழகூட்டியது அது. திரும்பி அறைக்குள் வந்தவள், கண்ணாடியைத் தூக்கிப் பிடித்து, உதட்டுக்கு வண்ணம் பூசினாள். கோவைப்பழம் போலவோ, சாக்லெட் நிறம் போலவோ இன்றி, இயற்கையான வண்ணம், அவளுக்குப் பொருந்தி இருந்தது.

''எப்படி திரும்புவே?'' என்றாள் தேவகி.

''சாயங்காலம் வந்திடுவேம்மா.''

''இருட்டுக்கு முன்னமே வந்துடு. அப்பா கத்துவார், இல்லாட்டி''

''அப்பா, எதுக்குத்தான் கத்த மாட்டார். காக்கா எச்சமிட்டா கூட கத்துவார்.''

அம்மா சிரித்து, முப்பது வருஷத் தாம்பத்யத்தின் கசப்பை விழுங்கிக் கொண்டாள். விழுங்கல், வாழையடி வாழையாக வந்த பரம்பரைப் பழக்கம். பாட்டி விழுங்கினாள். அம்மா விழுங்கினாள். தேவகி விழுங்கினாள். விழுங்காமல் முடியாது...

அடுத்த பதினைந்தாவது நிமிடம், ஜனனி ஆல்பர்ட்டுடன் பயணம் செய்து கொண்டிருந்தாள். ஆல்பர்ட், ஒரு சிநேகிதனிடம் கார் இரவல் வாங்கி வந்திருந்தான். அவனே அதைச் செலுத்திக் கொண்டிருந்தான். வாகனம், உருண்டு அல்ல, வழுக்கிக் கொண்டு ஓடுவதாக



''என மனைவி சமையல்ல 'சைபர்'னு தெரிஞ்சு போச்சு!''

''ஏன்?''

'' வடை சுட்டுத் தா'ன்னு கேட்டதுக்கு, 'எனக்கு குறிப்பார்க்கத் தெரியாது!'ங்கறா!''

– தமாஷ்காரன்

ஜனனிக்குத் தோன்றியது. முன்னெல்லாம், மகாபலிபுரம் சாலை, இருபக்கமும் முந்திரியாய்ச் சிரிக்கும். இப்போது, கல்மரம் முளைத்த காடாகி இருந்தது. எத்தனை எத்தனை ஓட்டல்கள். புதிய பாணிக் கட்டடங்களுக்கு மத்தியில், குடிசைகள், சுதந்திர இந்தியாவின் கொடியைத் தூக்கிப் பிடித்துக் கொண்டிருந்தன. மக்கள், வெய்யில் காய்ந்து கொண்டிருந்தார்கள். தேனீர் குடித்தார்கள். பேப்பரைப் படித்து, 150 கோடியா என்று வாய் பிளந்தார்கள்.

காற்று, ஜனனியின் தலைமுடியை வேகமாகக் கலைத்தது. முரட்டுத்தனமாகக் கொஞ்சி விளையாடியது. சட்டையின் மேல் பட்டனை கட்டாயமாக அவிழ்த்தது. ஜனனி, செயினை வாயில் கவ்வியபடி, வேடிக்கை பார்த்துக் கொண்டு வந்தாள். ஆல்பர்ட், அவள் தோள் மேல், தன் இடக்கையைப் போட்டு அணைத்துக் கொண்டான். அவள் அதை மறுக்கவில்லை. வேண்டியும் இருந்தது. ஐரோப்பிய பாணியும் இந்திய பாணிக் குடில்களுமாகக் கட்டப்பட்ட ஒரு ஹோட்டலின் படியில் ஆல்பர்ட் காரை நிறுத்தினான்.

''இது என்ன?''

''ஹோட்டல் குயூன்.''

''என்ன மாதிரி ஓட்டல்?''

''எல்லா மாதிரியும். சாப்பிடலாம். படுக்கலாம். ஓய்வு எடுக்கலாம்.''

ஆல்பர்ட், காரைப் பூட்டிக் கொண்டு, கீழ்த்தளத்திலே இருந்த ஒரு குடிலுக்கு அவளை அழைத்துச் சென்றான். உள்ளே நுழைந்ததும், கதவைச் சாத்திக் கொண்டான். சில்லென்று பரவியது குளிர்காற்று. வெள்ளை மாமிசப் பட்சிணி மாதிரி, இரட்டைக் கட்டில், 'ஹோ' வென்று கையை விரித்துக் கொண்டு கிடந்தது.

ஜனனிக்கு முதுகு உதறியது. கை கால்கள் விரைத்தன. வரக்கூடாத இடத்துக்கு வந்து விட்டோமோ என்று இருந்தது.

(தொடரும்)

## தில்லி நியூஸ் :

# கவலையின்றிக் காது குடையும் பிரதமர்!

இந்தியன் வங்கியின் முன்னாள் தலைவர் கோபால கிருஷ்ணனைக் கைது செய்து விசாரணை செய்ய, சி.பி.ஐ. யின் தில்லி அலுவலகத்திலிருந்து யாரும் வராமல், பெங்களூரிலிருந்து வந்தது, யார் வேலையாக இருக்கும் என்று பலரும் மண்டையைக் குடைந்து கொண்டிருக்கிறார்கள். அமைச்சர் எஸ்.ஆர். பாலசுப்பிரமணியத்துக்குக் கூடத் தெரிவிக்காமல், கடைசிவரை ரகசியமாக வைத்திருந்து, பிரதமரிடம் மட்டுமே சொல்லி, இந்தப் பணியைச் செய்தவர் சி.எம். இப்ராஹிம்!

● மத்திய அமைச்சர்களிலேயே, எல்லா அமைச்சர்களும் வெறுக்கும் அமைச்சர் ஒருவர் உண்டு என்றால், அவர் சி.எம். இப்ராஹிம்தான். ஆனால் பிரதமர் என்னவோ அவரைத்தான் மிகவும் நம்புகிறார். இப்ராஹிமைப் போன்ற திறமைசாலி வேறு யாரும் இடையாது என்று வெளிப்படையாகச் சொல்லி வருகிறாராம். லாலு பிரசாத் யாதவ், முலாயம் சிங், வி.பி.சிங், சீதாராம் கேசரி, ராம கிருஷ்ண ஹெக்டே என்று இப்ராஹிம் வெறுப்பாளர் பட்டியல் நீளுகிறது. தகவல் - ஒலிபரப்புத் துறையை அவர் கையாளும்விதம் காங்கிரஸ் தலைமைக்கு வெறுப்பேற்றியிருக்கிறது என்கிறார்கள்.

● இரயில்வே தொழிலாளர் போனஸ் பிரச்னையில், காபினெட்டைக் கலந்து ஆலோசிக்காமல், தன்னிச்சையாக, தம் துறை ஊழியர்களுக்கு ஊதிய உச்ச வரம்பு இன்றி போனஸ் வழங்கப்படும் என்று ராம் விலாஸ் பாஸ்வான் அறிவித்தது மத்திய அமைச்சரவையில் பலருக்கும் தர்மசங்கடத்தை உண்டாக்கி விட்டது - குறிப்பாக பிரதமர் தேவே கௌடாவுக்கு. அதனால் பாஸ்வான் மீது பிரதமருக்கு ஏகக் கோபம். 'அமைச்சரவை முடிவு பற்றி எனக்குத் தெரியாது. என்ன செய்வீர்களோ, ஏது செய்வீர்களோ? ரயில்வே ஊழியர்களுக்கான போனஸ், பிரச்னை ஏதுமின்றிக் கொடுக்கப்பட்டாக வேண்டும்!' என்று ராம்விலாஸ் பாஸ்வான் கூறிவிட்டது இன்னும் ஆத்திரத்தை உண்டாக்கி விட்டதாம்!

● சீதாராம் கேசரி, மெல்ல மெல்ல நரசிம்மராவிடமிருந்தும், அவரது பாணி அரசியலிலிருந்தும் விலகி வர ஆரம்பித்து விட்டார். பொதுக் காரியதரிசி ஆக குலாம் நபி ஆசாதையும், தமது அரசியல் செயலராக தாரிக் அன்வரையும் நியமித்தது, ராவ் ஆதரவாளர்களான மௌர்யாவுக்கும், தாவனுக்கும் அதிர்ச்சி அளித்திருக்கிறது. ஏற்கெனவே ஊழலை எதிர்த்துப் பேசி வரும் கேசரி, மெதுவாக ராவைக் கைகழுவிவிடும் நிலைமையும் வந்தால் வியப்படையத் தேவை இல்லை!

● ப்ரீதிஷ் நந்தி, டீவிக்காகத் தயாரித்திருக்கும் பிரதமர் தேவே கௌடா பற்றிய டாகுமென்டரி ஓகோ என்று இருக்கும் என எதிர்பார்த்தவர்களுக்கு ஒரே ஏமாற்றம். தேவேகௌடா சாம்பார் ஊற்றிக் கொண்டு இட்லி சாப்பிடுவதும், 'நான் ஹாசன் கிராமத்திலிருந்து வந்த சாதாரண விவசாயிங்க' என்ற வழக்கமான புலம்பலும், அவர் குடும்பத்தவர்களை எல்லாம் காட்டும் சப்பென்ற காட்சிகளுமாக, படம் பார்க்கிறவர்களுக்கு அலுப்பை ஏற்படுத்துகிறது.

● போடோலாண்ட் பிரச்னையில் தீர்வு காண, பிரதமரைச் சமீபத்தில் குவஹாத்தியில் போடோலாண்ட் தீவிரவாதிகளான பிரம்மாவும், போடோ மகளிர் நலச் சங்கத் தலைவி லதிகா ஹசாரிகாவும், பிரமாத எதிர்பார்ப்புடன் சந்தித்துப் பேசினார்கள். பலன் பூஜ்யம்! தனி போடோலாண்ட் பற்றியோ, தனிச் சலுகைகள் பற்றியோ கூட, பிரதமர் எதுவும் அறிவிக்காமல் ஏமாற்றி விட்டார் என்று இரண்டு பேருமே குமுறிக் கொண்டிருக்கிறார்கள்.



● குஜராத்தில் வெகு சாணக்கியத்தனமாகப் பாடு பட்டு, பா.ஜ.கவை இரண்டாகப் பிளந்து, சங்கர்சிங் வாகேலாவை ஆட்சி பீடத்தில் உட்கார வைத்தது காங்கிரஸ். இதில் கிடைத்த அற்ப சந்தோஷம், காற்றாகப் போய்விடும் போலிருக்கிறது! பா.ஜ.க. பின்பற்றத் தவறிய ஆர்.எஸ்.எஸ்.ஸின் நல்ல கொள்கைகளை விட்டு விடாமல் பின்பற்றப் போவதாக வாகேலா சொன்னது, காங்கிரசின் கன்னத்தில் அறைந்தது போல் ஆகிவிட்டதாம்!

● காங்கிரஸ் காரிய கமிட்டியில் ஹிமாசலப் பிரதேசத்துக்கு ஓர் இடம் கூட இப்போது கிடையாது. இத்தனைக்கும் ஹிமாசலப் பிரதேசத்தில், சென்ற நாடாளுமன்றத் தேர்தலில் நூறு சதவிகித வெற்றி கிடைத்தது காங்கிரசுக்கு. சமீபத்தில் நடந்த துணைத் தேர்தல்களிலும் காங்கிரசுக்கே வெற்றி கிடைத்தது. அப்படியும் முதல்வர் வீரபத்திர சிங்கை காங்கிரஸ் காரிய கமிட்டியில் சேர்க்காதது பற்றி, அங்குள்ள காங்கிரஸ்காரர்களுக்குக் கடுப்பு. நவம்பர் முதல் தேதி சீதாராம் கேசரி சிம்லாவுக்கு விஜயம் செய்யும் போது ஒரு பிடி பிடித்து விடுவதாகத் தீர்மானித்திருக்கிறார்கள். வீரபத்ரசிங், ராவ் ஆதரவாளர். கேசரி இதற்குச் சம்மதிப்பாரா?

● அமைச்சரவைக் கூட்டங்களின் போது, எதிரே மேசையில் இருக்கும் பென்சிலை எடுத்து, தோன்றியதை எல்லாம் கிறுக்கித் தள்ளிக் கொண்டிருந்தார் ராஜீவ்காந்தி. பிரதமர் தேவேகௌடா வேறு ரகம். மீட்டிங் ஆரம்பித்த உடனே, பென்சிலை எடுத்துக் காதைக் குடைந்துகொள்ள ஆரம்பித்து விடுகிறார்! இது மிகவும் ஆபத்தானது என்று அவருடைய மருத்துவர் டாக்டர் எம்.கே. கௌடா எத்தனையோ முறை சொல்லியும், தேவேகௌடாவின் காது குடைகிற பழக்கம் தொடர்கிறது. 'கூட்டத்தின் போது கண்ணயர்ந்து விடுவதை விட இது எவ்வளவோ பரவாயில்லை' என்கிறார் ஓர் அமைச்சர்!

● ஏர் இந்தியாவில் முதல் வகுப்புப் பயணிகளுக்கு ஒரு டிக்கெட் வாங்கினால், இன்னொரு டிக்கெட் இலவசம் என்ற திட்டம் அறிமுகப்படுத்தியது முதல், எல்லா அமைச்சர்களும் எங்கேடா சாக்கு, ஒரு சுற்றுச் சுற்றிவிட்டு வரலாம் என்று காத்துக் கொண்டிருக்கிறார்களாம். ஏராளமான ஜூனியர் அமைச்சர்கள், தங்கள் கிளப் கிளாஸ் டிக்கெட்டுகளை முதல் வகுப்பு டிக்கெட்டுகளாக மாற்றித் தருமாறு சிவில் விமானத்துறை சுற்றுலாத்துறை அமைச்சர் இப்ராஹிமிடம் வேண்டுகோள் விடுக்கிறார்கள். பிரதமரின் தனிச் செயலர் சதிஷ்சந்திரன், தேவேகௌடாவின் கவனத்துக்கு இதைக் கொண்டு சென்றிருக்கிறார். கடுப்பாகிப் போன பிரதமர் 'கொஞ்ச காலத்துக்கு இப்படி ஊர் – உலகம் சுற்றுவதை நிறுத்துங்கள்' என்று ஒரு அறிக்கை அனுப்பிவிட்டார்!

- **நியூஸ்வாலா**

# தெலுங்கு கங்கா வந்தாலும் ஆச்சா...

"நீலு பாக உந்தி காதா?"
சென்ற பதினைந்து நாட்களாக எங்கள் வீட்டுக்காரர் ராமகிருஷ்ணா ரெட்டிகாரு இந்த கேள்வியைக் கேட்டு உயிரை எடுத்துக் கொண்டிருந்தார். நானும் நரசிம்மராவ் ஸ்டைலில் பிடிகொடுத்து பதில் சொல்லாமல் மரத்துப் போன முகத்தோடு,

"அப்படி ஒண்ணும் தெரியலையே" என்று இழுத்துக் கொண்டிருந்தேன். ஆனால் உண்மையில் நீலு பாக உந்தியோ இல்லையோ செப்டம்பர் கடைசி வாரத்திலிருந்து 'பாக'தான் 'ஒச்சிந்து' கொண்டிருந்தது.

ஆனால் ரெட்டிகாருவிடம் 'பாக' என்று சொல்லி விட்டால் 'சுபா'லென்று வாடகையை ஏற்றி விடுவாரோ என்று பயந்து கொண்டுதான் சொல்லவில்லை. வீட்டிற்குக் குடிவந்த ஆறுமாதத்தில் 'இல்லு பாக உந்தியா' என்றார். எதார்த்தமாக "ஆகா... ஓகோ... பேஷ் பேஷ்" என்றேன். உடனே வாடகையை ஏற்றி விட்டார். ஒருமுறை டிரைனேஜ் அடைத்துக் கொண்டு ஒரே அவஸ்தையாகப் போய்விட்டது. இவரிடம் முறையிட்டும் பலனில்லாமல் போகவே, கார்ப்பரேஷன்காரர்களை வரவழைத்து நானே செலவு செய்து ஒருவழியாக சிராக்கிக் கொண்டேன். அடுத்த நாள் இதைப் பற்றி விசாரிக்க வந்தவரிடம் என் மனைவி "இப்புடு டிரைனேஜ் பாக உந்தி" என்று விட்டதில் உடனே வாடகை ஏற்றம் கண்டுவிட்டது. அதிலிருந்து வீட்டைப் பற்றி எந்த சமாசாரத்திற்கும் 'பாக' என்று அடைமொழி தருவதை தவிர்த்துக் கொண்டிருந்தேன்.

இந்த முறை நீலு பற்றி வீட்டுக்காரர் விசாரிப்பதில் வேறு ஒரு காரணமும் இருக்கக்கூடும்தான். தமிழ் பூமியில் தெலுங்குத் தண்ணீர் வருவது அந்த ஆந்திரக்காரருக்கு பெருமையாகத்தான் இருக்கும். கடந்த இரண்டு வார காலமாக கார்ப்பரேஷனா, கிருஷ்ணாவா என்று இனம்கண்டு கொள்ள முடியாத நிலையில் என் மனைவியே,

"ஆகா கிருஷ்ணா தண்ணீன்னா
கிருஷ்ணா தண்ணிதான்... சாதம்
என்னமா வெள்ளை
வெளேர்னு வெந்
திருக்கு



அகிலா கார்த்திகேயன்

பாருங்கோ... துணிக்கெல்லாம் துளி சர்ப் போட்டாலும் அத்தனை நுரை வருது" என்று புளகாங்கிதமடைந்து கொண்டிருந்தாள்.

"உன் வாயை மூடிட்டு பேசாம இரு... வீட்டுக்காரன் காதில் விழுந்து தொலைக்கப் போறது" என்று அவளை எச்சரித்தேன். ஆனால் அவள் இன்னொரு தொல்லைக்கு வழிவகுக்க ஆரம்பித்தாள்.

"ஏன்னா... அப்போ இந்த வருஷம் நம்ம சாந்தியோட தலைதீபாவளியை வைச்சுக்கலாமா" என்றாள். நான் திடுக்கிட்டேன். 'அடிப்பாவி நீ இன்னுமா அதை மறக்காம இருக்கே... பதிமூணு வருஷமாச்சு, என்று மனத்தில் நினைத்தபடி,

"இத்தனை வருஷத்துக்கப்புறம் இது அவசியமா... கல்யாணமானதும் வர்ற முதல் தீபாவளிதான் தலைதீபாவளி... இப்போ நம்ப பொண்ணுக்கு பையன், பொண்ணுன்னு தலைக்கு ஒண்ணு பொறந்தாச்சி... இனிமே என்ன தலைதீபாவளி வேண்டியிருக்கு" என்று முனகினேன்.

"அல்பமா எதையாவது பேசாதீங்க... முறையா முதல் வருஷம் பண்ற தலைதீபாவளிக்கு வந்த மாப்பிள்ளையைத்தான் விரட்டி அனுப்பிட்டீங்க. நம்ப மாப்பிள்ளை ரொம்ப





"என்னப்பா! ரெட்டை வெடின்னு சொன்னே? ஒண்ணுதான் வெடிச்சது. இன்னொன்னு வெடிக்கலையே?"

"அது வெளியில் இருந்துட்டு ஆதரவு தரும். அவ்வளவுதான் சார்!"

-பாஸு

ரோஷக்காரர்... அப்புறம் வர்றதேயில்லே. இந்த வருஷம்தான் தண்ணி கஷ்டமிருக்காதுன்னு நிச்சயமா தெரியறது. இன்னிக்கே லெட்டர் எழுதிடுங்கோ. விசாகப்பட்டினத்திலேர்ந்து வரணும்... ரிசர்வ் பண்ணி வைச்சுக்கட்டும்" என்றான்.

அதற்குப் பிறகு வாய் திறக்க வழியில்லை. பெண், மாப்பிள்ளை குழந்தைகளை தலை தீபாவளிக்கு அழைத்துக் கடிதம் போட்டேன்.

இதுபோல்தான் 1983-ம் வருஷம் ஒரிஜினல் தலைதீபாவளிக்கு மாப்பிள்ளையை அழைத்துக் கடிதம் போட்டேன். சென்னை வருவதற்கே பயந்தார். அந்த வருடம் 'மே' மாத வெயிலில் சென்னையே வறண்டிருந்த நிலையில் கல்யாணம் வைத்துக் கொண்டது ஆபத்தாகி விட்டது. ஆந்திராவிலிருந்து ஒரு பஸ் நிறைய வந்திறங்கிய பிள்ளை வீட்டுக்காரர்களுக்கு சரித்திரத்தில் சரித்திரம் காணாத அனுபவம் ஏற்பட்டது. வேர்த்து விறுவிறுத்து வந்தவர்களை பவர்கட் பாடாய்படுத்த, ரேஷன் முறையில் ஆளுக்கு அரை பக்கெட் தண்ணீர் என்று பகிர்ந்து கொடுத்து குளிக்கச் சொன்னபோது, கோங்கூரா சட்னியை விட அதிகமாக அவர்களுக்கு எரிச்சல் உண்டாகி விட்டது. அத்தனை தண்ணீர் கஷ்டம். கல்யாணத்தன்று குளிக்காமல் கொள்ளாமல், தாலி கட்டிய கழுத்தோடு தலைதெறிக்க ஓடியவர்கள்தான்.

அதே பயத்தில் தலைதீபாவளிக்கு வந்த மாப்பிள்ளையை நட்டநடுநிசியில் நான் எழுப்பி,

"மாப்ளே... தண்ணி லாரி வந்திருக்கு. நாளை மறுநாள் தீபாவளி... லாரியை விட்டுட்டா கங்கா ஸ்நானம் பண்றது கஷ்டம்" என்று இரண்டு பிளாஸ்டிக் குடத்தைக் கையில் திணித்து, என்னுடன் தெருக் கோடி வரை இருட்டில் இழுத்துக் கொண்டு சென்றதில் மிகவும் கடுப்பாகி விட்டார்.

"இனிமே எப்ப தண்ணி கஷ்டம் தீருமோ அப்பதான் மெட்ராஸ் பக்கம் தலைவெச்சிப் படுப்பேன்" என்று தீபாவளிக்கு முதல் நாளே என் பெண்ணை அழைத்துக் கொண்டு சென்றவர்தான்.

ஏதோ அதே வருடம் அடிக்கல் நாட்டப்பட்டு தெலுங்கு கங்கை அடி அடியாக நானூறு கிலோ மீட்டருக்கு நகர்ந்து இப்பொழுது சென்னை வந்தாயிற்று.

மாப்பிள்ளைக்கும் தைரியமாக தீபாவளி அழைப்பு விட்டாயிற்று.

வந்து கொண்டிருப்பது கிருஷ்ணாதான் என்ற நம்பிக்கையில் ஆந்திரமணம் கமழ குளித்து, துவைத்து, சமைத்துக் கொண்டிருந்த குதூகலத்தில் இப்படி உடைப்பு ஏற்படுமென்று எதிர்பார்க்கவில்லை.

பிறந்த வீட்டிலிருந்து புறப்பட்டு வரும் கிருஷ்ணாவிற்கு, புகுந்து வீட்டிற்கு வரத் தயங்குவது போல, நடுவில் கால்வாய் கரையில் உடைப்பு ஏற்பட்டு, பீறிட்டு வெளியே ஓடி விட்டதாகப் பத்திரிகையில் தகவல் வந்தது. சந்திரபாபுநாயுடு தாரை வார்த்த தண்ணீரே கிருஷ்ணா அல்ல வருணா என்று செய்தி சொன்னது. ஆந்திரா எல்லையில் சேகரமான மழைநீர்தான் மதகினைத் திறந்தபோது தமிழ் நாடு எக்ஸ்பிரஸ் மாயகிருஷ்ணாவாக பாய்ந்திருக்க வேண்டுமென்று செய்திகள் கூறின.

"அதுதானே பார்த்தேன்... பதினாலு ரூபாய் கொடுத்து வாங்கின அரிசி இப்படி ஏமாத்திடுத்தேன்னு..." என்று என் மனைவி பிளேட்டை திருப்பிப் பேச ஆரம்பித்தாள். வந்து கொண்டிருப்பது கங்கையல்ல கார்ப்பரேஷன்தான் என்றவுடன் எனக்கு கபரா அதிகமாகி விட்டது. ஆந்திராவில் உடைப்பு ஏற்பட்ட இடத்தைச் சீர்செய்யவே பலநாள் ஆகுமென்ற நிலையில் 'கிருஷ்ணா நீ பேகனே பாரோ' என்று அழைத்துப் புண்ணியமில்லை. இந்த அழகில் மாப்பிள்ளையை வேகமாக வரச் சொல்லிக் கடிதம் போட்டாயிற்று. கார்ப்பரேஷனை நம்பி கங்காஸ்நானம் செய்ய முடியுமா...

கவலை பிடித்துக் கொள்ளவே பொதுப் பணித்துறை மந்திரி கணக்காக கவலையுடன் சம்பந்தப்பட்ட அலுவலகங்களுக்கு அடிக்கடி சென்று "கிருஷ்ணா எப்பவரும்... கிருஷ்ணா எப்ப வரும்" என்று கேட்க ஆரம்பித்து விட்டேன்.

"என்ன ஸார் உங்க தொந்திரவு தாங்க முடியலையே... என்னவோ கிருஷ்ணாவிலே பிறந்து கிருஷ்ணாவிலே குளிச்ச மாதிரியில்லே தொலைச்சி எடுக்கறீங்க... கார்ப்பரேஷன் வாட்டர் வருது இல்லே... உங்க மேனி எழிலுக்கு அது பத்தாதாக்கும்'' என்று அவர்களிடம் வாங்கிக் கட்டிக் கொண்டேன்.

வாஸ்தவம்தான். அவர்கள் சொல்வது போல கார்ப்பரேஷன் தண்ணீர் ஒழுங்காகத்தான் வந்து கொண்டிருந்தது. புருஷனை விட்டு அரசனுக்கு ஏன் அலைய வேண்டும்... சமாதானமானேன்.

மாப்பிள்ளையும் பெண்ணும் குழந்தைகளோடு வந்தாயிற்று. விடிந்தால் தீபாவளி. அவரிடம் கிருஷ்ணா பற்றிய உண்மையைக் கூறவில்லை.

"மாப்ளே... நீங்க ரொம்ப வைராக்யமான பேர்வழி... அது என்ன தெலுங்கு கங்கை வந்தாத்தான் தலைதீபாவளின்னு வீம்பா இருந்துட்டீங்க. உங்க ராசி பாருங்க குழாயைத் திறந்தா கங்கை வந்து விழறா மாதிரி இந்த வருஷம் அமைஞ்சி போச்சு... நாளைக்கு 'தெலுங்கு கங்கா ஸ்நானம்'தான்'' என்றேன்.

மாப்பிள்ளை முகத்தில் புஸ்வாணம் பிரகாசித்தது.

விடிந்தது. மழை... பேய் மழையாகக் கொட்டிக் கொண்டிருந்தது.

"முதல்ல மாப்பிள்ளையை உட்கார வைச்சி தலையிலே எண்ணெயை வையுங்கோ'' என்றாள் என் மனைவி. சொத சொதவென்று எண்ணெய் உடம்போடு மாப்பிள்ளை குளியலறை சென்றார்.

"வெந்நீர் வேண்டாம்... பச்சைத் தண்ணியே போதும்னு அடம் பிடிக்கறீங்க... பரவாயில்லே. பைப்பை திறங்க. தெலுங்கு கங்கை கொட்டும்...'' என்று நான் பாத்ரூமிற்கு வெளியே சப்தம் போட,

"ஐயையோ... ஒரே நாத்தம் சகிக்கலே'' என்றபடி டவலை சுத்திக் கொண்டு மாப்பிள்ளை அலறியபடி வெளியே வந்தார்.

"என்ன, நாத்தமா... இவ பண்ணின தீபாவளி பட்சணம் எதையாவது பாத்ரூமில எலி கொண்டு போட்டிருக்கும்'' என்று அசடுவழிந்தேன்.

"தெலுங்கு கங்கையா இது... ஒரே சாக்கடை நாத்தமா வருது... ஐயையோ நான் எப்படி குளிப்பேன்னு தெரியலையே'' என்று மாப்பிள்ளை மிரண்டார்.

எனக்கு ஒன்றும் புரியவில்லை.

"தண்ணி நேத்து வரை நல்லாத்தானே வந்துண்டிருந்தது'' என்றபடி குளியலறை குழாயைத் திறந்து தண்ணீரை மூக்கின் அருகில் கொண்டு போனேன்.

ஆகா... சாக்கடை நாற்றம்தான்.

கொட்டுகிற மழையில் எங்கேயோ குழாய்கள் உடைந்து கார்ப்பரேஷன் வாட்டரும், கழிவுநீரும் சங்கமமாகி விட்டிருக்கின்றன. எப்போதாவது இப்படி நடப்பது வழக்கம்தான். அது தீபாவளி அன்றா நடக்க வேண்டும்?

'தெலுங்கு கங்கா ஸ்நானம் போச்சா...

சென்னை கூவம் ஸ்நானம் ஆச்சா'' என்று ஆந்திரா மாப்பிள்ளையைக் கேட்க வேண்டும் போலிருந்தது.

"மாப்பிள்ளை கொடுக்க பாக உன்னாரா'' என்று சமயம் புரியாமல் விசாரிக்க வந்த வீட்டுக்காரரை,

"லே...து'' என்று உரக்கக் கத்தி, எண்ணெய் உடம்போடு நின்ற மாப்பிள்ளையின் குரல் விரட்டியது.

பாவம் அவருக்குக் கொடுத்து வைத்தது அவ்வளவுதான்; என்ன செய்வது.



அறிவுக்கூர்மையுள்ள தன் மகளை அழைத்த தந்தை ''நீ என் மீது அதிக அன்பு வைத்திருக்கிறாயா அல்லது உன் கணவன் மீது அதிக அன்பு வைத்திருக்கிறாயா?'' என்று கேட்டார்.

''இருவரிடமும்தான்!'' என்றாள் மகள்.

''இருவரில் யாருக்கு முதன்மை தருகிறாய்?'' என்றார் தந்தை.

''என் தாயாருக்குத் தன் தந்தையைக் காட்டிலும் உங்களிடம் அல்லவோ அன்பு அதிகம். நானும் அப்படித்தானே இருக்க முடியும்!'' என்றாள்.

— ஆர்.ஆர்.பூபதி



*"தீபாவளி மலர் வாங்கிட்டு வர்றேன்னு போனீங்களே, தீபாவளி மலர் எங்கே?"*

*"ஐயயோ... சமையல் பொடி, பாக்குத்தூள், சிகைக்காய் பவுடர், விபூதி பொடி, கிளினிங் பவுடர், பல் பொடி, பெருங்காயம், உப்புத்தூளெல்லாம் சரியாயிருக்கான்னு பார்த்து வாங்கியதிலே, தீபாவளி மலரை வாங்கிக் கொள்ள மறந்துட்டேன்...!"*

— *சின்னஞ்சிறு கோபு*

# குறையொன்றுமில்லை...

ஓலைப் பெட்டியிலிருந்த பூணூலை எடுத்து, மந்திரத்தைச் சொல்லி தராசுத் தட்டில் வைத்தார் அந்த ஏழை பிராமணர்.

'இந்தப் பூணூல் அப்படி என்ன எடை இருந்து விடப் போகிறது? பாவம் இது கூடத் தெரியாமல் இவர் அதன் எடைக்கு நிகராகப் பொருள் கொடுத்தால் போதும் என்கிறாரே...' என்று மனத்துக்குள் எண்ணிக் கொண்டான் ராஜா.

ஒரு காசை எடுத்துத் தட்டிலே போட்டான். அந்தத் தட்டு கொஞ்சம் கூட தாழவேயில்லை! இரண்டு காசுகள் போட்டான்.... பத்து... எவ்வளவு போட்ட போதும் அசையாமல் நின்றது. தன்னுடைய ஆபரணங்கள் அனைத்தையும் கொண்டு வரச் சொல்லி பூணூலுக்கு நிகராக எடை போட்டுப் பார்த்தான். அப்போதும் அதன் இணையை எட்ட முடியவில்லை. உடனே தனது ரத்தின கிரீடத்தை எடுத்து வைத்தான். "என்னிடம் இருக்கிறது மொத்தத்தையும் எடுத்து வைச்சுட்டேன்..." என்கிறான்.

உடனே அந்த நாட்டின் மந்திரி போய், ராஜாவின் காதோடு சொன்னான் : "அவசரப்பட வேண்டாம்! இந்த நூல் நம்ம ராஜ்ஜியத்தையே சூறையாடி விடும். இந்த பிராம்மணரை வீட்டுக்கு அனுப்பிவிட்டு நாளைக்குத் திரும்பவும் வரச் சொல்லுங்கள்..."

ராஜாவும் அந்த உத்தமரைப் பார்த்து "நீங்கள் நாளைக்கு வந்தால் இந்த நூலுக்கு நிகரான எடையில் செல்வத்தைத் தருகிறேன்.." என்றான்.

பிராம்மணர் உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால் வரை நடுங்கிக் கொண்டிருந்தார். 'இப்படி பூணூல் எடைக்கு மேல் வாங்கிக்கலை என்று சொல்லி விபரீதத்தில் மாட்டிக் கொண்டோமே' என்று அவருக்கு ஒரே பயம்.

அந்த பயத்துடனேயே புறப்பட்டுப் போனவர் மறுநாள், 'சிரச்சேதம் பண்ணி விடுவானோ அரசன்...!' என்கிற பயத்துடனேயே திரும்பி வந்தார்.

தராசு கொண்டு வரப்பட்டது. பூணூலை வைத்தார் அந்தணர். ராஜா ஒரு காசை எடுத்துப் போட்டான். உடனே பூணூல் தட்டு மேலே போய் விட்டது!

'அதே நூல்தான் அதே தராசுதான். பிறகெப்படி இந்த அதிசயம் நிகழ்ந்தது? நேற்று வேறு மாதிரி அல்லவா நடந்தது!' - ராஜா மந்திரியை அழைத்து தன் சந்தேகத்தைக் கேட்டான்.

மந்திரி அதற்கு விளக்கம் சொன்னான் :

"நேற்று அவர் கொண்டு வந்தது யக்ஞோபவீதம். யக்ஞோபவீதம் பரமம் பவித்ரம்னு சொல்வதுண்டு. மிகவும் புனிதமானது அது. அதற்கு நிறை காண முயல்வதே தப்பு. நமக்கெல்லாம் ஆத்மா என்று பெயர். பகவானை மட்டுமே பரமாத்மா என்று 'பரம' -'உத்தமமான' என்கிற அடைமொழி சொல்லி அழைக்கிறோம். அதே அடைமொழி இந்த

முக்கூர் லக்ஷ்மி

யக்ஞோபவீதத்துக்கும் சொல்லப்படுகிறது. அவ்வளவு பவித்ரமானதாக அது இருந்ததி னாலேதான் ராஜ்யத்தையே எடை கொண்டது. ஆனால் இன்றைக்கு அதனுடைய பவித்ரம் போய் விட்டது. அதனாலே சுலபமாக அதை எடை போட்டு விட்டோம்."

"ஏன் போனது அதனுடைய பவித்ரம்?" என்று கேட்டான் அரசன்.

"பூணூலைத் திரிப்பவர்கள் (தரிப்பவர் களும்) சில நியமங்களிலிருந்து தவறவே கூடாது. ஆனால், இந்தப் பெரியவர் தமது பயம் காரணமாக இன்றைக்கு அந்த நியமங்களைச் செய்யவில்லை. அதனாலேதான் அதன் பவித்ரம் போனது."



நியமமாகச் செய்யப்படும் பூணூலின் மகிமையைச் சொல்வது இந்தக் கதை. சர்வமேன்மை பொருந்திய பரம பவித்ரமான யக்ஞோபவீதம் பகவானுக்கு வாமனாவ தாரத்தின் போது அணிவிக்கப்பட்டது. சூரி யனே அவருக்கு பிரம்மோபதேசம் பண்ணி னார் என்று சொன்னேனில்லையா...? பார்வதி தேவி வந்து அவருக்கு முதல் பிக்ஷை இடு கிறாள்! பலாச தண்டத்தை பகவானின் கையிலே தருகிறார்கள்.

பலாச தண்டம் என்பது என்ன...? தண்டம் என்பது சன்னியாசிகளின் கரத்தில் கொடுக் கப்படும் கோல். உபநயன காலத்தில் பலாச மரத்தின் கிளையை இப்படி 'வடு'வின் கையில் கொடுப்பதுண்டு.

ஏன் பலாச மரத்தின் கிளையைக் கொடுக்க வேண்டும்? வேறு மரக் கிளையைக் கொடுத் தால் என்ன? என்று கேட்டால் அதற்கொரு விளக்கம் இருக்கிறது :

வேத வித்துக்கள் பலர் ஒரு சமயம் பலாச மரத்தடியில் கூடினார்கள். அங்கே அமர்ந்தபடி காயத்ரி மந்திரத்தை ஓதி அதன் மகிமையைப் பேசினார்கள். இதைக் கேட்டுக் கொண்டே இருந்த பலாச மரத்தின் வட்டமான இலைகள், மூன்று மூன்று கூறுகளை உடைய இலைகளாக வடிவத்தில் மாறிவிட்டன. காயத்ரி மந்திரத்தில் மூன்று பாகங்கள் உண்டு. அந்த மந்திரத்தைக் கேட்டதும் அதன் மூன்று பாகங்களையும் தன் இலையிலேயே காட்டியது பலாச மரம்! அதனால்தான் பலாச தண்டத்தைக் கொடுக்கும் வழக்கம் உண்டாயிற்று.



பலாச தண்டம் ஏந்தி, பிரும்ம தேஜ ஸோடு ஜொலிக்கிறார் பரமாத்மா. வடிவமோ வாமன வடிவம். 'மாயா' என்கிற சப்தம்

நரசிம்மாச்சார்யார்

கிருஷ்ணாவதாரத்தோடு தொடர்புபடுத்திச் சொல்லப்படுவது போல் வாமனாவதாரத்துடனும் இணைத்துச் சொல்லப்படுகிறது. அவனும் மாயன்; இவனும் மாயன்!

'மாயா வாமனனே மதுசூதா நீயருள்வாய்' என்று 'வாமனனையும் மாயனை மன்னு வடமதுரை மைந்தனை' என்று கண்ணனையும் பாடுகிறார்கள் ஆழ்வார்கள்.

இப்படிப்பட்ட மாயன்தான் மூவுலகளந்த திரிவிக்கிரமனாய் விச்வரூபமெடுக்கவிருக்கிறான்.

விச்வ சப்தத்துக்குரிய இந்த மாயன், நர்மதா நதி தீரத்திலே, பிரஹலாதனுடைய பேரனான பலி சக்ரவர்த்தி செய்த அசுவமேத யாகத்துக்கு வருகிறான்.

யக்ஞ சம்ரக்ஷகன் அந்த பரமாத்மா. சிராந்த சம்ரக்ஷன் என்றும் அவனைச் சொல்வதுண்டு. சிராத்தம் பண்ணும் போது ஸ்ரீ மஹாவிஷ்ணும் ஆவாஹயாமி என்று அவனை ஆவாஹனம் பண்ணுகிறோம். எனவே அவன் சிராத்த சம்ரக்ஷகன் ஆகிறான்.

சிராத்த சம்ரக்ஷகனாக மட்டுமா அவன் இருக்கிறான்? எல்லாவற்றுக்கும் சம்ரக்ஷகன் அவன்தான். சர்வதா ரக்ஷகன் – எப்போதும் ரக்ஷிக்கிறவன். சர்வத்ர ரக்ஷகன் – எங்கும் ரக்ஷிக்கிறவன்!

இதை உணர்த்த வேடிக்கைக் கதை ஒன்று சொல்வார்கள் : ஒருத்தர் மாதம் இருபத்தைந்தாம் தேதி வரைக்கும் எப்படியோ குடும்பத்தை நடத்தி விட்டார். "அடுத்த ஆறு நாளைக்கு பகவான் எப்படியாவது நடத்திக் குடுத்துட்டான்னா, ஒண்ணாம் தேதி எனக்கொரு ஐயாயிரம் ரூபாய் பணம் வரும். அடுத்த மாசம் பரவாயில்லை; சமாளிப்பேன்...'' என்றார் அவர்.

இருபத்தைந்து தேதி வரை இவர் நடத்தி விட்டாராம் குடும்பத்தை! மேல் வருகிற ஆறு நாட்களுக்குத்தான் பகவானுடைய சகாயம் வேண்டுமாம்! அடுத்த மாதம் ஐயாயிரம் ரூபாய் தம்மை ரக்ஷிக்கும் என்கிறார்! எத்தனை வித ரக்ஷணம் பாருங்கள்....! திரவிய ரக்ஷணம்; இவரே ஒரு ரக்ஷகர். அப்புறம் பரமாத்மா...? சும்மா இடையிலே ஆறு நாட்களுக்கு ரக்ஷித்தால் போதுமாம்!

இது நம்மிடத்திலே இருக்கிற அவிவேகத்தினாலே வரும்படியான சொல்! உண்மையில் பகவான்தான் சர்வதா ரக்ஷகன். அவன் ரக்ஷிக்கிறதில்லை என்று நாம் நினைக்கலாமா...? நினைக்கத்தான் முடியுமா? எப்போதும் அவன்தான் நம்மை ரக்ஷித்துக் கொண்டிருக்கிறான் என்பதைப் பூரணமாக உணர வேண்டும்.

பராசர பட்டர் ஸ்ரீரங்கத்திலே உபன்யாசம் பண்ணுகிறார் – பகவானை ரக்ஷகன் ரக்ஷகன் என்று சொல்லிக் கொண்டேயிருக்கிறார். உபன்யாஸம் கேட்கிற கோஷ்டியிலே ஒருத்தர் எழுந்தார்.

"வெறுமனே ரக்ஷகன் ரக்ஷகன் என்று சொல்லிவிட்டால் போதுமா? புத்தகத்திலே இருக்கற பிரமாணத்தைக் காண்பித்தால் போதுமா? எங்கே பகவான் நம்மை ரக்ஷிக்கிறான். அப்படி அவன் ரக்ஷிப்பதாகத் தெரியவில்லையே. நானல்லவா அவஸ்தைப் படுகிறேன் என் குடும்பத்தை ரக்ஷிக்க! ஓடி ஓடி உழைத்தாலும் பொழுது போதவில்லையே... பகவான்தான் ரக்ஷிக்கிறான் என்று சொன்னால் எப்படி சுவாமி பொருந்தும்?''

"அப்போ, பகவான் உன்னை ரக்ஷிக்கலை என்கிறாயா?" – பட்டர் கேட்டார்.

''ரக்ஷிக்கறதாகத் தெரியலை. படற அவஸ்தை மொத்தமும் நான்தான்...!''

பார்த்தார் பராசர பட்டர். "இதுக்கான பதிலை நாளைக்குச் சொல்கிறேன். காலையில் பத்து மணிக்கு என் கிரஹத்துக்கு வாரும்" என்று சொல்லி அனுப்பி விட்டார்.

சந்தேகம் கேட்டவர் ரங்கநாதர் கோயில் புரோஹிதர். கோயில் காரியங்களை முடித்துக் கொண்டு பத்து மணிக்கு வந்து பட்டர் முன் நின்றார்.

பட்டர் கேட்டார் : "ராத்திரி நன்றாகச் சாப்பிட்டீரா?"

"சாப்பிட்டேன்..."

"நன்றாகப் படுத்துத் தூங்கினீரா?"

"தூங்கினேன்."

"எத்தனை மணிக்குப் படுத்தீர்?"

"ஒன்பது மணிக்கு..."

"எத்தனை மணிக்குத் தூக்கம் வந்தது?"

"ஒரு ஒன்பதரை மணியிருக்கும்..."

"எப்போது வழக்கமாய் எழுந்திருப்பீர்?"

"காலை நாலரை மணிக்கு..."

''ராத்திரி ஒன்பதரை மணிக்கப்புறம் உம்மை நீர் உணர்வீரா...?''

"தூக்கத்தில் யார்தான் உணர்வார்கள்....?"

"இரவு ஒன்பதரையிலிருந்து பிராதஹ் காலம் நாலரை மணி வரைக்கும் உம்மை நீரே தான் ரக்ஷித்துக் கொள்கிறீரா...?"

"தூங்கும்போது எப்படி ரக்ஷித்துக் கொள்ள முடியும்?"

''தூங்கும்போது நாம் படுத்திருக்கும் பவனமே இடிந்து நம் மீது விழலாம். துஷ்ட ஜந்துக்கள், விஷ ஜந்துக்கள் வந்து கடிக்கலாம்... இதிலிருந்தெல்லாம் நம்மைக் காப்பாற்றி அந்த பரமாத்மா ரக்ஷிக்கவில்லையா...? இவ்வாறு தூக்கத்திலே ரக்ஷிப்பவன் விழிப்பின் போதும் ரக்ஷிப்பான் என்று தெரியவில்லையா...?'' என்று கேட்டார் பராசர பட்டர்.

(தொடரும்)

கூட்டங்களுக்குச் செல்வேன். டாக்டர் கலைஞர் பேச்சுக்கு அடுத்தபடியாக எனக்குப் பிடித்தது நாஞ்சிலார் அவர்களது மேடைப் பேச்சுதான்" என்று சொல்லும் சின்னிக்கு இப்போது வயது நாற்பத்தொன்று.

கிட்டத்தட்ட இருபத்தாறு வருடங்களாக, நாஞ்சிலாரின் உதவியாளராகப் பணியாற்றும் சின்னி, நாஞ்சிலாரது குடும்பத்தில் ஒருவராகவே ஆகிவிட்டார் என்பதுதான் உண்மை.

"நாஞ்சிலாரது நம்பிக்கைக்குரிய உதவியாளராகச் செயல்பட்டு வரும் தம்பி சின்னியை எனக்கு நன்றாகத் தெரியும். அவர் அருகில் இல்லாவிட்டால் நாஞ்சிலாருக்குக் கையும் ஓடாது, காலும் ஓடாது. நாஞ்சிலார் தோளில் விழும் துண்டைக்கூட சின்னிதான் எடுக்க வேண்டும்" – ஒரு திருமண விழாவில் இப்படிப் பேசினார் முதல்வர் கலைஞர்.

சின்னி என்கிற சின்னி கிருஷ்ணன், நாஞ்சிலாருக்கு அறிமுகமான போது வயது பதினேழுதான். "எங்கள் குடும்பம் திராவிட உணர்வு கொண்ட குடும்பம். என் பள்ளி நாட்களிலேயே நான் தி.மு.க. பொதுக்

1960களின் இறுதியில் நாஞ்சிலார் புரசைவாக்கம் மூக்காத்தாள் தெருவுக்குக் குடிவந்தார். அருகில் குடியிருந்த சின்னிக்கு, தமது மனம் கவர்ந்த பேச்சாளர் பக்கத்தில் குடிவந்தது குறித்து ஏக சந்தோஷம். அப்போதுதான் தியாகராயாவில் பி.யு.சி. சேர்ந்திருந்த சமயம். காலையும் மாலையும்

# நாஞ்சிலாரின் இதயம், சின்னி...

நாஞ்சிலார் வீட்டுக்கு வந்து விடுவார். வேலை இருக்கிறதோ இல்லையோ, நீண்ட நேரம் இருப்பார். அப்போது பாராளுமன்ற உறுப்பினராக இருந்த நாஞ்சிலாருக்குச் சரியான உதவியாளர் யாரும் இல்லை. சின்னியுடைய உழைப்பும், நம்பகத்தன்மையும் நாஞ்சிலாரைக் கவர்ந்து விட்டன. அப்படியே முழு நேர உதவியாளராக மாறி விட்டார் சின்னி.

தினமும் காலை எட்டு மணிக்கு வரும் சின்னி, இரவு பத்து மணி அளவில்தான் வீட்டிற்குத் திரும்புகிறார். நாஞ்சிலாருடைய, கட்சி அரசு நிகழ்ச்சிகளை ஒருமுகப்படுத்துவது சின்னிதான். நாஞ்சிலாருக்குத் தேவையான உணவு, அவர் ஆர்வமுடன் படிக்கும் புத்தகங்கள் மட்டுமல்ல; மற்றவரிடம் அவர் என்ன எதிர்பார்க்கிறார் என்பது கூட சின்னிக்குத் தெரியும்!

சின்னியின் மிக முக்கியமான பணி, நாஞ்சிலாரின் உடல்நலத்தைக் கவனித்துக் கொள்வது. வாரம் ஒருமுறை டாக்டரை அழைத்து, உடல் பரிசோதனை, பின்னர் பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை வேறு சில பரிசோதனைகள் என்று சின்னியே முறையாகச் செயல்பட்டு, நாஞ்சிலாரின் உடல்நிலையைச் சீராக வைத்துக் கொள்ள உதவுகிறார். வேளா வேளைக்கு சாப்பிட வேண்டிய மருந்து, மாத்திரைகளை எடுத்துக் கொடுப்பதும் சின்னிதான்!

நாஞ்சிலாரின் அரசியல் ஏற்றத்தாழ்வுகள் எப்படி இருந்தாலும், சின்னி அவரிடம் தொடர்ந்து உதவியாளராக இருந்து வருவதுதான் சிறப்பான விஷயம். நாஞ்சிலாரின் உடல்நிலை மற்றும் வேலைப் பளுவிற்கு ஏற்ப, பார்க்கவரும் கட்சிக்காரர்களை நன்றாகவே சமாளித்து அனுப்புகிறார் சின்னி.

"முன்னுக்குப் பின் முரணாகப் பேசி ஏமாற்றுபவர்களைக் கண்டால் அவருக்கு மிகவும் கோபம் வரும். ஆனால் அது உடனே மறைந்து விடும். இத்தனை வருட காலத்தில் என்னால் மறக்க முடியாத வடுவாகப் படிந்திருப்பது ராஜீவ் காந்தி கொலை செய்யப்பட்ட அன்று நடந்ததுதான். எங்கிருந்தோ வந்த வன்முறைக் கும்பல், ஐயாவின் காரை வெளியே தள்ளிச் சென்று கொளுத்தி விட்டது. என்னால் ஒன்றும் செய்ய முடியவில்லை" என்று மனவருத்தத்துடன் சொல்கிறார் சின்னி. வெளியூர் மட்டுமல்ல, வெளிநாட்டுப் பயணங்களின் போதும் சின்னியை அழைத்துச் செல்கிறார் நாஞ்சிலார்.

**சி**ன்னிக்குப் பெண் பார்த்து தமது செலவிலேயே கல்யாணம் செய்து வைத்தார் நாஞ்சிலார். சின்னி குடும்பத்து நிகழ்ச்சிகள் எல்லாவற்றிலும் நாஞ்சிலார் குடும்பத்தின் பங்கு இருக்கும்; அதே போல் நாஞ்சிலார் குடும்பத்தின் நல்லது கெட்டதுகளில் சின்னி குடும்பத்துக்கும் பங்கு உண்டு.

நாஞ்சிலாரின் வீட்டில் சின்னியிடம் பேசிக் கொண்டிருந்தபோது, தற்செயலாக அமைச்சரையும் சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்தது. "கலைஞர் இவனைப் (சின்னியை) பற்றிச் சொன்னதை நம்பாதீங்க" என்று சிரித்துக் கொண்டே சொன்ன நாஞ்சிலார், சின்னி அறையை விட்டுச் சென்றதும் நம்மிடம் சீரியஸாக, "அவன் என்னோட இதயமாகவே மாறி விட்டான். அவனில்லாமல் ஒன்றுமே நடக்காது!" என்றார் மனநிறைவோடு.

சந்திப்பு : **ப்ரியன்**

வண்ணப்படங்கள்: **பேஜர் கே. மூர்த்தி**

# படித்ததில் பிடித்தது :




## ஒவ்வொருவரும் கோடீஸ்வரர் ஆகலாம்!

**ச**சிகலா அண்ட் கோ மாதிரி குறுக்கு வழியில்தான் கோடிகளைச் சேர்க்க முடியும் என்பதில்லை. நாம் ஒவ்வொருவருமே சுலபமாகக் கோடீஸ்வரர்களாக முடியும் என்கிறார் அவ்வையார். எப்படி?

நம்மை மதிக்காதவர்களின் வீட்டு வாசல்படியை நாம் சென்று மிதிக்காமல் இருப்பது ஒரு கோடி ரூபாய்க்குச் சமம். நம்மை அன்போடு வரவேற்று 'சாப்பிடுங்கள், சாப்பிடுங்கள்' என்று கனிவுடன் உபசரிக்காதவர்கள் வீட்டில் சாப்பிடாமல் இருப்பது கோடி ரூபாய்க்குச் சமம்; கோடி ரூபாய் கொடுத்தாவது நல்லவர்களின் நட்பைப் பெற்று வாழ்வது கோடி ரூபாய்க்குச் சமம்; கோடானுகோடி கொடுக்கிற போதும் சொன்ன சொல் தவறாமல் வாழ்வது கோடி ரூபாய்க்குச் சமம். இதைத்தான் அவ்வையார் –

*மதியாதார் முற்றம் மதித்தொருகாற் சென்று*
*மிதியாமை கோடி பெறும்*
*உண்ணீர் உண்ணீர் என்று உபசரியார் தம்மனையில்*
*உண்ணாமை கோடி பெறும்*
*கோடி கொடுத்தும் குடிப்பிறந்தார் தம்மோடு*
*கூடுதல் கோடி பெறும்*
*கோடானு கோடி கொடுப்பினும் தன்னுடைதாக்*
*கோடாமை கோடி பெறும்*

என்று கூறுகிறார்.

**எ**த்தனைதான் ஆற்றல் பொருந்தியவராக இருப்பினும் அவருக்கும் நண்பர்கள் என்கிற துணை வலிமை வேண்டும். அப்படியில்லாதவர்கள் தங்களின் சொந்த ஆற்றலை வைத்துக் கொண்டு மாத்திரமே எந்தவொரு காரியத்தையும் செய்து விட முடியாது. முளைப்பது நெல்லிலுள்ள அரிசிதான் என்றாலும் உமியை நீக்கிவிட்டால் அரிசியால் முளைக்க முடியுமா? அதுபோல்தான் நீங்கள் அரிசியாக இருந்தா-லும் நண்பர்களின் துணை என்கிற உமியும் அவசியம்! இதை ஓர் அழகான செய்யுளில் சொல்கிறார் அவ்வையார்!

*பண்டு முளைப்பது*
*அரிசியே யானாலும்*
*விண்டுமி போனால்*
*முளையாதாம் கொண்டபேர்*
*ஆற்றல் உடையார்க்கும்*
*ஆகாது அளவின்றி*
*ஏற்ற கருமம் செயல்.*

**இ**ப்படிப்பட்ட அற்புதமான செய்யுட்களை ஏராளமாகப் பாடிய அவ்வையார் ஒருவரா பலரா என்னும் ஐயப்பாட்டுக்கு, அவ்வையார் ஒருவரேதான் என்று அழுத்தமான தமது கருத்தைச் சாதகமான சான்றுகளோடு தெரிவிக்கிறார், பேராசிரியர் தி. முத்து-கண்ணப்பர்.

ஒரே அவ்வையார் அத்தனை நூற்றாண்டுகள் வாழ்ந்திருக்க முடியுமா என்ற ஐயப்பாட்டுக்கு புறநானூற்றுச் செய்யுள் ஒன்றினை முத்து-கண்ணப்பர் முன்வைக்கிறார்.

அவ்வைக்கு அதியமான் என்ற அரசன் அதிசய நெல்லிக்கனி ஒன்று கொடுத்தான் அல்லவா? அது எப்படிப்பட்ட நெல்லிக்கனி? அதனைப் பெற்றுக் கொண்ட அவ்வை என்ன கூறி வாழ்த்துகிறார்?

'சிறுஇலை நெல்லித் தீங்கனி குறியாது நின்னகத் தடக்கிச் சாதல் நீங்க எமக்கு ஈந்தனையே' என்று வாழ்த்துகிறார்!

அப்படிப்பட்ட நெல்லிக்கனியை உண்டதால் அவ்வை ஆயிரக்கணக்கான ஆண்டு வாழ்ந்தார் என்று முடிவு கட்டுகிறார். அதுவுமின்றி அவ்வையார் ஒரு குண்டலினியோகி என்பதையும் விநாயகரை வழிபட்டு தெய்வீக சக்தி பெற்றவர் என்பதையும் நூலாசிரியர் தம் வாதத்துக்கு அனுசரணையாகக் குறிப்பிடுகிறார்.

தமிழர்கள் பிழையின்றித் தமிழைப் பேசவும் எழுதவும் செயல்பட்டு வரும் பேராசிரியர் முத்து-கண்ணப்பனாரின் (அவ்வைதாசன்) வாதத்தை ஏற்றுக் கொள்ள முடியாது என்கிற ஆராய்ச்சியாளர்கள் கூட ஒரு விஷயத்தை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். தமிழ் மூதாட்டியை இளைய தலைமுறையினருக்கு இந்த நூலில் மெச்சத்தக்க விதத்தில் அறிமுகம் செய்திருக்கிறார் என்பதுதான் அது.

**- ஐ. ரா. சுந்தரேசன்**

**அவ்வையார் வாழ்வும் வாக்கும் – பேராசிரியர் தி. முத்து-கண்ணப்பர். கங்கை புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை – 600 017. விலை ரூ. 40.**

## பா. ராகவன் ?

15

"இப்போ நீ ஏதாவது வித்தியாசமா உணர்றியா வசந்தி..? இல்லையே...?"

சுகன்யா அவள் இரு கைகளையும் பற்றியபடி கேட்டாள். இல்லையென்பது போல் தலையசைத்தாள், வசந்தி.

"ஆங்! இப்படித்தான் - ஒரு நட்புணாலயும், சில சமயம் வெறும் சடங்காகவும்தான் சேகர் பார்க்கறவங்க கையையெல்லாம் பிடிச்சிக் குலுக்குறான். இதை இயல்பா ஏத்துக்கணும்."

"என்னமோ அவர் மனசுக்குள்ளே பூந்து பார்த்த மாதிரி பேசறேனே மன்னி!"

"உன்னைச் சொல்லித் தப்பில்லை... அப்பா அம்மா உன்னை நகை மாதிரி பூட்டிப் பூட்டி வளர்த்துட்டாங்க. வெளி உலகத்தையே நீ பார்க்கலை. சரி... என்கிட்டே உனக்கு நம்பிக்கை இருக்கா?"

"இருக்கிறதுனாலேதானே இங்க வந்திருக்கேன்...?"

"அப்ப கேளு... இங்க மெட்ராஸ் வந்த புதுசுல ஆபீஸ்ல எல்லார் கிட்டேயும் என்னை அறிமுகப்படுத்தி வைச்சார் ராஜு. நான் அத்தனை பேரோடவும் கைகுலுக்கித்தான் அறிமுகப்படுத்திக்கிட்டேன். முதல்ல சில பேருக்கு இலேசா அதிர்ச்சி. அப்படியும் பழகிண்டுட்டாங்க. இப்பக்கூட உன் நிச்சயதாம்பூல ஃபங்ஷனுக்குப் போனோமே... முதல்ல சேகர், 'யூ மஸ்ட் பி மிஸஸ் ஸ்ரீராம்'னு கைகொடுக்கத்தான் வந்தான். அப்பா, அம்மாவெல்லாம் கூடவே இருந்தாங்க. அவங்களுக்கு அது பிடிக்காதுன்றதாலே நான் கை குலுக்காம வணக்கம் சொல்லி அறிமுகப்படுத்திக்கிட்டேன்."

வசந்தி, வாயே திறக்காமல் இறுக்கமாய்க் கேட்டுக் கொண்டிருந்தாள். சென்னையின் முக்கிய ஹோட்டல்களுக்கு அவளைச் சாப்பிட அழைத்துப் போனபோதெல்லாம் சேகரிடம் வந்து பேசிய பெண்கள். அவன் மீது விழாத குறையாக முதுகில் தட்டி, கைகுலுக்கி வாழ்த்துத் தெரிவித்த குட்டை முடி, லிப்ஸ்டிக் மூஞ்சிகள், சிகரெட்டுக்கு 'லைட்' கேட்டு விட்டு ஓ! நான் மறந்துட்டேன். யூ டோன்ட் ஸ்மோக்' என்று சிரித்துக் கொண்ட ஜீன்ஸ் மாமி... என்று ஒவ்வொருத்தராய் மீண்டும் அவள் மனத்திரையில் தோன்றி தொந்தரவு செய்து கொண்டிருந்தார்கள்.

"போகிற இடத்துல எல்லாம் பிடாறி பிடாறியா பெண்கள் வந்து அவர் மேல விழறதை நான் எதுக்காகப் பொறுத்துக்கணும்..? அவர் என்னைத்தானே கல்யாணம் பண்ணிக்கப் போறார்...?"

- கோபமும் துக்கமும் உச்சத்தை எட்ட, குரல் பூவரசமிலையாக நடுங்கியது வசந்திக்கு.

அத்தனை உச்சத்திலும் அவள் ஜிமிக்கிகள் ஆடாமலே இருந்ததை மனத்துக்குள் வியந்தபடி சுகன்யா யோசித்தாள். இந்தப் பெண்ணை எப்படி சமாதானப்படுத்துவது? கைகுலுக்குவதால் கற்பு பறிபோய் விடவில்லை என்பதை எப்படி உணர்த்துவது? விளம்பர ஏஜென்ஸி வட்டாரங்களில் இப்போதெல்லாம் நிறைய பெண்கள் புழங்குகிறார்கள். போதாக்குறைக்கு தொழில்முறை மாடல்களுடனும் தொடர்பு இருக்கும். இதனால்தான் சேகர் போகுமிடத்திலெல்லாம் அவனை வந்து சந்திக்கும் பெண்களின் விகிதாசாரம் அதிகமாயிருக்கிறது.

- இதைச் சுருக்கமாக வசந்திக்கு விளக்கிவிட்டுச் சொன்னாள்...

"சரி, நான் ஒண்ணு கேக்கறேன்... சேகரோட கைகுலுக்கிப் பேசறது பெண்கள் மட்டும் தானா...? ஆண்களெல்லாம் என்ன பண்றாங்க..? அவங்களும் அவனைப் பார்த்தா முதுகுல தட்டி, தோள்ல கை போட்டுத் தானே பேசறாங்க...?"

"ஆமாம்..."

"பெண்கள் அப்படிப் பேசறதும் அதே நட்பு உணர்ச்

சிலதான். அவங்களைப் பொறுத்தவரைக்கும் அதுல தப்பு எதுவும் இல்லை. அப்படியெல்லாம் நட்பா இருக்கறது தப்புன்னு உனக்குச் சொல்லித் தந்திருக்காங்க. அதனால அது உனக்குக் குற்ற' தெரியுது... அருவருப்பா இருக்கு..."

"அப்ப அவங்க செய்யறதெல்லாம் சரி... நான் நினைக்கிறதுதான் தப்புங்கறேளா...?"

"உன்னோட நிலைமைல இருந்தா, நானும் அப்படித்தான் நினைச்சிருப்பேனாயிருக்கும். ஆனா உனக்குள்ள ஒரு தெளிவு பிறக்கணும். அப்பத்தான் உன்னால சந்தோஷமா இருக்க முடியும். சேகர் உன் பேர்ல அன்பும் காதலும் வைச்சிருக்காங்கறதைப் பார்த்தவுடனே என்னால புரிஞ்சுக்க முடிஞ்சது. அது உனக்கு ஏன் புரியலைன்றதுதான் ஆச்சரியம்..."

வசந்தி மீண்டும் அழ ஆரம்பித்து விட்டாள். விசும்பல்களினூடேயே அவள் பேசியதை சுகன்யா மிகவும் பிரயத்தனத்துடன் புரிந்து கொள்ள வேண்டியதாயிருந்தது.

"அப்பா அம்மாகிட்டே சொன்னா, 'நீதான் அட்ஜஸ்ட்



பண்ணிப் போகணும்'ங்கறாங்க... நீங்களானா, நான் அவரோட அன்பைப் புரிஞ்சுக்கலேங்கறேன். எல்லாரும் சேர்ந்து என்னைக் குற்றவாளியாக்கிட்டேன். ஆனா அது நிஜமில்லே... அவர் பேர்ல நான் உயிரையே வைச்சுட்டேன்... இந்த மாதிரி மத்த பெண்கள்கிட்டேயெல்லாம் அவருக்குத் தொடர்பு இருக்கும்னு நான் கொஞ்சம் கூட எதிர்பார்க்கலை..."

"வசந்தி! தயவுசெய்து அழறதை நிறுத்தறியா? நீ இவ்வளவு தூரம் மனசு உடைஞ்சு போறதுனால நான் ரொம்ப அந்தரங்கமான ஒரு விஷயத்தைச் சொல்றேன்."

வசந்தி கொஞ்சம் அழுகை அடங்கி நிமிர்ந்தாள்.

"உங்க அண்ணாவை முதன் முதலா நான் சந்திச்சப்போ எல்லார்கிட்டேயும் கைகுலுக்கற மாதிரிதான் குலுக்கினேன். அவனும்... சாரி, அவரும் சகஜமாத்தான் அதை ஒத்துக்கிட்டார். அப்படியும் ஒருத்தரை ஒருத்தர் விரும்பறோம். கல்யாணம் பண்ணிக்க நினைக்கறோம் என்கிறது எங்களுக்கே மெள்ள புரிஞ்சு, தெளிவான பிறகு... முதல் முறையா எங்களுக்குத் தனிமையில இந்த உண்மை உறைச்சது பாரு... அன்னிக்கு... அண்ணா ரொம்ப தயக்கமா 'மே ஐ ஹோல்ட் யுவர் ஹாண்ட்' அப்படின்னு அனுமதி கேட்டார். இத்தனை நாளா இல்லாத ஒரு புது மனுஷரைப் பார்க்கற மாதிரி எனக்கே இலேசா வெட்கம் வந்தது. அப்புறம்... அந்த முதல் ஸ்பரிசம்... இப்போ அந்த ஸ்பரிசத்தை நினைச்சாக்கூட எனக்கு சிரிப்பு வரும்..." உணர்ச்சி மேலிட்டால் சற்று இடைவெளி விட்டுத் தொடர்ந்தாள்.

"வெறும் கைகுலுக்கல்... அது நாம டிராயிங் ரூம்ல வைக்கற பிளாஸ்டிக் பூ மாதிரி... சும்மா அலங்காரம்... நிபந்தனைகளில்லாத உள்ளன் போட ஒரு ஆணும், பெண்ணும் என்னன்னு சொல்லலாம்... தொட்டுப் பழகறபோது... அது நீ, பூத்தொடுத்து ராமர் படத்துக்கு மாலை போடறேயே... அந்த மாதிரி... அதுக்கு சமமான ஒரு காரியம். ஓர் அர்ப்பணிப்பு..."

– இத்தனையும் வசந்திக்குப் புரியக்கூடிய தமிழில் சொல்வது சுகன்யாவுக்கு ரொம்ப கஷ்டமாக இருந்தது.

"நான் சொல்றது புரியுதா...?" என்று வசந்தியை ஏறிட்டபோது, அவள் கண்கள் ஆச்சரியத்தில் அகல விரிந்திருப்பதைப் பார்த்தாள் சுகி.

"ஒரு அதிசயம் தெரியுமா மன்னி...? அண்ணா உங்ககிட்டே கேட்ட மாதிரியேதான் அவரும் என்கிட்டே கேட்டார். 'மே ஐ ஹோல்ட் யுவர் ஹாண்ட்...?' அதே வார்த்தை... எனக்கு அப்படியே கண்கலங்கிப் போச்சு. அப்புறம்..." முகம் சிவந்து போய் நிறுத்தி விட்டாள் வசந்தி.

தன் தரப்புக்கு ஒரு மாபெரும் ஆதாரம் கிடைத்துவிட்ட தைரியத்தில், அதைப் பற்றிக் கொண்டு பேசினாள் சுகி.

"அப்படியுமென்ன வசந்தி! அதுலேருந்தே ரொம்பத் தெளிவா தெரியலையா... உன்னையும் அந்த மத்த பெண்களையும் சேகர் ஒரே 'லெவல்'ல வைக்கலை... நீ அவருக்கு ரொம்ப ஸ்பெஷல்..."

"நீங்க சொல்றச்சே கேட்க நன்னாயிருக்கு மன்னி... ஆனா நாலு இடம் போறச்சே இப்படிப் பொண்கள் வந்து இழையறது பிடிக்கலையே..."

"வசந்தி! ஒண்ணு, நீ இந்த நிலைமைக்குப் பழகிக்கணும்; இல்லை.. சேகர்கிட்டே இதைப் பத்திப் பேசி இது உனக்குப் பிடிக்கலைன்னு சொல்லிடணும்... அப்படியே நீ சொன்னாலும் அவனால இனிமே மாற முடியுமாங்கறது ரொம்ப சந்தேகம்... அதுக்காக இந்தக் கல்யாணமே வேண்டாம்னு நீ சொல்றது அபத்தம். முதல்ல இந்த எண்ணத்தைத் துடைச்சிப் போடு... உனக்கோ சேகரைப் பார்த்தவுடனேயே பிடிச்சுப் போயிருக்கு. இந்த மாதிரி அப்பா – அம்மா தேர்ந்தெடுக்கற ஒருத்தர்கிட்டே மனசை சுலபமா அர்ப்பணிக்க முடியறதே இந்தக் காலத்துல ரொம்ப அபூர்வம். அதை உன்னால செய்ய முடிஞ்சிருக்கு. சேகரும் அப்படித்தான். உன் பேரைச் சொன்னால் மயங்கி மயங்கி நிற்கிறான். அதனால, தைரியமா இரு. நம்பிக்கையை அஸ்திவாரமாக்கி வாழ்க்கையை ஆரம்பி..."

"சரி மன்னி..." என்றாள் வசந்தி, குழந்தையைப் போல...

"பிரபா வீட்டுக்கு நீங்க போக வேண்டாம்பா. வசந்தி இங்க வந்திருக்கா. அவளை அழைச்சிக்கிட்டு இன்னும் அரை மணி நேரத்துல நான் அங்க வந்து சேர்றேன்..." – பக்கத்து வீட்டிலிருந்து போன் செய்து மாமனாரிடம் பேசினாள் சுகன்யா.

"அங்க வந்தாளா வசந்தி...? தனியாவா? எதுக்கு...?" அவசரமாகக் கேட்ட ராமநாதன், படபடப்பதையும் சரஸ்வதி பக்கத்தில் நின்று பதறுவதையும் கற்பனை செய்து பார்ப்பது சுகன்யாவுக்குக் கஷ்டமாக இருக்கவில்லை.

"அமைதியா இருங்க அப்பா! பிரச்னை எதுவும் இல்லை. நான் நேர்ல வந்து எல்லாம் சொல்றேன்..."

"சீக்கிரம் வந்து சேருங்க. நான் வேணா வந்து அழைச்சுண்டு வரவா...?"

"வேண்டாம்பா.. நானே பத்திரமா ஆட்டோவில கொண்டு வந்து விட்றேன்..."

போனை வைத்த வேகத்தில் அவர் கோபம் ஒளிவுமறைவின்றித் தெரிந்தது.

ஆட்டோவை விட்டு இறங்கியபோது சரஸ்வதியும், ராமநாதனும் வாசலிலேயே காத்திருந்தார்கள். மூச்சைப் பிடித்தபடி இரு

வரும் வசந்தியின் முகத்தையே உற்றுப் பார்த்துத் தவிப்பதைக் கண்ட சுகன்யாவுக்குப் பரிதாபமாய் இருந்தது. காலத்தோடு மாற மறுப்பதால் எத்தனை வீண் சிரமங்கள், கவலை, உளைச்சல்கள்...?

அவர்களை ஏறிட்டுப் பார்க்காமல் வசந்தி விறுவிறுவென்று உள்ளே போய் விட்டாள்.

''சௌக்கியமா அப்பா? கல்யாண வேலையெல்லாம் சுறுசுறுப்பா நடந்துக் கிட்டிருக்கு போலிருக்கே.... காலைல குமார் பத்திரிகை கொண்டு வந்து கொடுத்தான்....''

சுகன்யா அவர்களை இயல்புக்குக் கொண்டு வர முயன்றாள்.

அவளை வீட்டுக்குள்ளே கூட அழைக்கத் தோன்றாமல் மாமனாரும் மாமியாரும் ஏற இறங்கப் பார்த்தார்கள்.

''என்ன சொன்னா வசந்தி...?''

''ரொம்ப பயந்து போய்ட்டா... சேகருக்கு நிறைய பெண்களைத் தெரிஞ்சிருக்கு. அங்க இங்க அவங்களைப் பார்த்து அவர் பேசறது அவளுக்குப் பிடிக்கலை....''

''அதுதான் தெரியுமே... அதுக்காக கல்யாணம் வேண்டாம்னுடறதா..? போகப் போக மாறிடுவார்னு சமாதானப்படுத்தினா கேட்டாத்தானே...''

''இப்போ சமாதானமாயிட்டா... பயப்படாதிங்க... எல்லாம் சரியாப் போயிடுத்து....''

''எப்படி சமாதானமானா...? நாங்க எவ்வளவு சொன்னாலும் கேட்காம மாலை மாலையா கண்ணீர் விட்டா..! சித்தே மனது மாறட்டும்னுதான் பிரபா வீட்டுக்கு போய்ட்டு வரச் சொன்னேன...''

– மாமியார் அவநம்பிக்கையுடன் கேட்டார்...

''நான் எடுத்துச் சொன்னேன். ஓரளவுக்கு சமாதானமாயி அப்புறம் தன்னைத் தானே தேத்திண்டுட்டா...''

''அப்படி என்ன சொன்ன, அவ மனசைத் தேத்திக்கிற மாதிரி...?''

''நட்பு வேற, சும்மா அலுவலக ரீதியா பழகறது வேற, ஒருத்தர் மேல வைக்கற நம்பிக்கை கலந்த அன்பு வேற.... கொஞ்சம் விரிவா சொன்னேன்....''

''ஏத்துண்டாளா...?''

''ஆமாம். இப்ப தைரியமாயிருக்கா.''

ராமநாதன் சற்று ஆடிப் போய் வாசல்படியிலேயே உட்கார்ந்து விட்டார். சரஸ்வதி கண்கலங்கிய படி பக்கத்தில் நின்றாள்.

''அம்மா சுகன்யா! எங்களாலேயே ஒத்துக்க முடியாத விஷயமா அது இருந்தது.... அவளை எப்படி சமாதானப்படுத்தி எப்படி இந்தக் கல்யாணத்தை நடத்தப் போறேன்னு ரொம்ப பயமாயிருந்தது.... இப்போ உனக்குத்தான் நான் நன்றி சொல்லணும்...''

நெகிழ்ச்சியுடன் மாமனார் பேசுவதைக் கேட்டு அவருக்குக் கீழ்ப்படியில் தானும் உட்கார்ந்தாள் சுகன்யா.

''இப்படியெல்லாம் உணர்ச்சிவசப் படாதிங்கப்பா...''

''இல்லை... நான் ரொம்ப தப்பா எடை போட்டுட்டேன். நீ போன் பண்ணினப்ப.. அவகிட்டே பேசியிருப்பேன்னு புரிந்தது. ஆனா... நீ அவ கட்சிதான் பேசியிருப்பேன்னு நினைச்சேன். உன் மனசுக்குப் பிடிக்காம இந்தக் கல்யாணத்துக்கு ஒத்துக்காதேன்னு அவளுக்கு ஆதரவா பேசி, விஷயத்தை இன்னும் குழப்பிடப் போறியேன்னு ரொம்பப் ரொம்ப பயந்துட்டேன்....''

''எப்படிப்பா அந்த மாதிரி ஒரு எண்ணம் உங்களுக்கு வந்தது...?''

''மனுஷாளைப் புரிஞ்சுக்காததுனால தான்மா... உன் இஷ்டப்படி நீயும் ஸ்ரீராமும் கல்யாணம் பண்ணிண்டதால வசந்திக்கும் அவ இஷ்டப்படி இந்தக் கல்யாணத்தை மறுக்கற சுதந்தரத்தை நீ தூண்டி விட்டுடுவேன்னு ஒரு தீர்மானம் எனக்குள்ள...''

''கல்யாணம்ங்கறது அவங்கவங்க நிலையில இருந்து முடிவு பண்ற விஷயமில்லையாப்பா..? ஒரே மாதிரி அளவுகோல் உதவாது... வசந்திக்கு சேகரைப் பிடிச்சிருக்கு.... சேகருக்கும் அவளைப் பிடிச்சிருக்கு.... இந்த அடிப்படை சரியாயிருக்கும்போது மத்ததெல்லாம் சுலபமா அமைஞ்சு போயிடாதா...?''

''உள்ளே வாம்மா சுகன்யா...''

– மாமியாரின் வாஞ்சையான அழைப்பை ஏற்று எழுந்தபோது, சுகன்யாவுக்கு அடிவயிற்றில் மின்னல் போல் ஒரு வலி கிளம்பி கீழ்நோக்கிப் பாய்ந்தது.

(தொடரும்)

**தங்க நகை பரிசு!**

இந்த இருபத்தாறு வாரத் தொடர், ஒவ்வொரு வாரமும் ஒவ்வொரு கதாசிரியர் பெயரில் வெளியாகி வருகிறது. ஆனால் அவர்களுள் ஒரே ஒரு நபர்தான் இதை எழுதி வருகிறார். தொடரை எழுதியவர் யார் என்பதைக் கண்டுபிடிப்பது உங்கள் சாமர்த்தியம். கடைசி வாரம் வரை காத்திருந்து, அந்த இதழில் வெளியாகும் கூப்பனில் விடை எழுதி அனுப்புங்கள். சரியான விடைக்கு, தங்க நகை பரிசு! பலர் சரியாக எழுதினால் குலுக்கலில் ஒருவரே பரிசு பெறுவார். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.



# வெளியே

பாண்டிபஜாரின் விழிபிதுங்கல் சட்டென்று விடுபட்ட இடத்தில் இருந்தது, அந்தக் கடை!

வஞ்சனையில்லாமல் படர்ந்திருந்த தூங்குமூஞ்சி மரத்து நிழலில் ஒரு டேபிள். அதன் மேல் வரிசை வரிசையாக லாட்டரி சீட்டுகள். கட்டுக் கட்டாக, கவர்ச்சிகரமான நிறங்களில், படங்களில்... நாகாலாந்து, பூடான், ஸ்ரீகணபதி.

"இதெல்லாம் என்னங்க?"

கடைக்காரர் அந்தச் சிறுவனை சற்று கவனித்தார். ஈர்க்குச்சி உடல், ஒண்ணரைக் கண், கார்ப்பரேஷன் பள்ளிச் சீருடை.

"பரிசுச் சீட்டு!"

"பரிசுன்னா...?"

"அதிர்ஷ்டம். இப்ப நீ என்கிட்டே ஒரு சீட்டு வாங்கறே, உனக்கு அதிர்ஷ்டம் இருந்தா, அதைப் பொறுத்து, இந்த ஒத்தை சீட்டுக்கு ஒரு லட்சம் கிடைக்கலாம். நாற்பது லட்சம் கூட விழலாம். பார்த்தியா இதை... எத்தனை பேரு இப்படி 'லக்' அடிச்சு பணக்காரனா ஆயிருக்காங்கன்னு...!"

"குலுக்கல்னா? எப்ப..?"

"தினம் தினம், வாராந்தர லாட்டரி. இதைப் பார்த்தியா... குமரன், சில்க், டிஸ்கோ. ம்... உன் பேரு என்ன?

"தங்கவேலு...!"

# கொஞ்சம் வெளிச்சம்

ஜி. நாராயணன்

"ஏ அப்பா...! 'பேர்'லியே தங்கம் இருக்கே!' அப்புறம் என்ன யோசனை? சுவர்ணலட்சுமி ஒண்ணு வாங்கிடறது. நீ வேணா பாரு, விழுந்தா... ஒரே தூக்கா தூக்கிடாதா! அப்படியே உச்சாணிக் கிளைக்குக் கொண்டு போயிடும். ஒரு பய பிடிக்க முடியாது. கார் என்ன... பங்களா என்னன்னு... சக்கைப் போடுதான். அமர்க்களமா இருக்க மாட்டியா...!"

இந்த தேன் தடவல் பேச்சு சிறுவனுக்குப் புதிது. பையில் தனியாக இருந்த அந்த நாணயத்தை விரல்களால் நெருடிப் பார்த்தான். யோசனையாக இருந்தது. அம்மாவுக்குத் தெரியாமல் எடுத்த பணம். ரப்பர் வாங்க காசு தர மாட்டேன் என்கிறாள். வாங்கலாம் என்று எடுத்து வந்தால்... இரண்டும்கெட்டானாக மனம் தவிக்க, கடைசியில் ஆசை வெல்ல...

இவனிடம் கொடுப்பதற்கு முன், அந்த லாட்டரி சீட்டை கடைக்காரர் மீண்டும் பார்த்தார்... ஏதோ எண்ணினார்! ம்... "ரெண்டும் மூணும்... அஞ்சு... பதினாறு... இருவத்தேழு... கூட்டினா... அம்மாடி ஒம்போது வருது. 'லக்கி' நம்பர். யோகம்தான். வெளுத்துக் கட்டு."

குடிசை முழுவதும் தேடியாயிற்று. தலைகீழப் புரட்டலாகப் பார்த்தாயிற்று. கிடைக்கவில்லை.

எங்கே வைத்தோம்? கற்பகம் யோசனை செய்தாள். மண்டையைக் குடைந்து கொண்டாள். அத்தனை குடைந்தும், அந்த ஐந்து ரூபாய் போன இடம் தெரியவில்லை!

'முந்தாநாள் மாவுமில் போனதற்கு, ரேஷன் வாங்கி வந்ததற்கு என்று வேலை செய்கிற வீட்டில் கொடுத்தார்கள்! புடைவையில் முடிந்து கொண்டு வந்தேன். கதவைத் திறந்து, உள்ளே வந்ததும் என்ன செய்தேன்... முடிச்சை அவிழ்த்து நேரே இந்த டப்பாவில்தான் போட்டேன். போட்டு... பாத்திரங்களுடன் சேர்த்து வைத்தேன். ஓர் அவசரத்திற்கு இருக்கட்டும் என்று வைத்த பணம்.

'எப்படிப் போயிற்று? யார் எடுத்திருப்பார்கள்?'

'இந்த மனுஷன்தான்... வேறு யாருக்கு இப்படி ஒரு புத்தி போகும்? இவருக்குத்தான் தேவைகள் அதிகம்.'

'ரேஸ் பைத்தியம். மங்காட்டம். இன்னும் தெருமுனையில் நாடா வைத்து இழுத்துப் பார்ப்பது முதல், ஊரில் இருக்கிற எல்லா வற்றிலும் ஒன்று விடாமல் சூதாடி, சூதாடிம்... பணத்தைப் பார்த்தவுடன் கையில் நமைச்சல் எடுத்திருக்கும்... 'வை... ராஜா வை...'ன்னு எங்கேயாவது, எதிலேயாவது கொண்டு வைச்சு, தொலைச்சு...'

சே என்று வந்தது. 'ஒருநாளைப் பிடித்துத் தள்ளுவது ஒரு யுகம் போல் இருக்கிறது எனக்கு. இவர் என்னடாவென்றால்... வரட்டும் இன்றைக்கு. ரெண்டிலே ஒண்ணு பார்க்காமல்... கேட்டால் என்ன ஆகும்? சண்டை தான் மிஞ்சும். பணம் போனதுதான்.'

'நமக்குத்தான் ஜாக்கிரதை போறாது. வழக்கம் போல் வீட்டுக்கார அம்மாளிடமே கொடுத்து வைத்திருக்க வேண்டும்.'

கற்பகத்திற்கு, ஏனோ தன் மகன் தங்கவேலுவின் மேல் சிறிது கூட சந்தேகம் எழவில்லை.

அந்தக் கனவு அரைகுறையாக முடிந்து விட்டது.

செல்வராக உட்கார்ந்திருக்கிறான். மேல் கூரை மெல்லப் பிரிகிறது. பிரிந்து, அந்தப் பொத்தல் வழியாக 'கல்' என்ற ஒலியுடன் ஏதோ ஒன்று விழுந்து, உருண்டு ஓட... இவன் பார்த்துக் கொண்டிருக்கும்போதே தொடர்ச்சியாக, அதே போல் நீர்வீழ்ச்சி மாதிரி விடாமல்... கொட்டோ கொட்டு என்று கொட்டுகிறது. இவனையே மூடுகிற மாதிரி விழுந்து கொண்டேயிருக்க, கொடுக்கிற தெய்வம்...! என்னவெல்லாம் நமக்குக் கொடுத்திருக்கிறது என்று பார்ப்பதற்குள்...

வாசல் கேட்டு வேகமாக உலுக்கப்பட்டது. ஓசை எழுப்பிவிட விழித்தான்...!

கேட்டுக்கு வெளியே அந்த யமாஹா தெரிந்தது. மூன்றாவது மாடியில் குடி இருக்கிற இளை

ருன்.

எழுந்து ஓடினான். கதவை விரியத் திறந்துவிட..

"என்னய்யா வாட்ச்மேன் நீ? இந்தத் தூக்கம் தூங்கறே...?"

உட்கார்ந்தான். வயிறு இரைந்தது. பசி இரைச்சல். இன்று கற்பகத்துடன் சண்டை. ஐந்து ரூபாய் காணாமல் போய் விட்டதாம். 'நீதான் எடுத்தே.. நீதான் திருடிட்டே...!' என்று நேரடி குற்றச்சாட்டு. அழுகை, கூப்பாடு. 'அட...! சீ!' என்று இடுப்பில் ஒரு உதை விட்டு சாப்பிடாமலேயே கிளம்பி விட்டான். கையிலும் காசு இல்லை. என்றுமே இருந்ததில்லை. தங்கியதில்லை. இல்லாக் கொடுமை. வறுமை. வறுமை. இந்த வறுமை இளமையில் இருக்கவில்லை. அது சுகமாக இருந்தது. இதைப் போன்று சில் லாப்பாக இருக்கிற விடியலில், அப்பாவின் கையைப் பிடித்தபடி வரப்புகளில் ஏறி இறங்கி, வயல்வெளியில் சுற்றி, வாய்க்காலில் 'தொப் தொப்'பென்று குதித்து, ச்சு...

'நம் அதிர்ஷ்டம்தான். சமயத்தில் கட்டையாகி விடுகிறது. கூடவே வந்து, 'சட்'டென்று திரும்பி விடுகிறது. சொல்லாமல் கொள்ளாமல் போய் விடுகிறது. இந்தக் கனவைப் போல்! ஆனால்..

'ஒருநாள் கண்டிப்பாக அடிக்கத்தான் போகிறது. வாசலைத் தட்டப் போகிறது. இப்பொழுது சிரிப்பவர்கள் வாயை மூடப் போகிறது. எப்பொழுது? அதுதான் தெரியவில்லை. அப்படி அடிக்கும் வரை, தட்டும் வரை, நம்பிக்கை இழக்கக்கூடாது. விடக் கூடாது. விட்டதையெல்லாம் பிடிக்க வேண்டும். பிடிக்க வேண்டும்...!'




**மீ**ண்டும் தேடல்...

எப்படி விட முடியும்? ரேஷன் கடையில் கால் கடுக்க நின்றதற்கு, மினகாய் நெடியேறி, சேர்ந்தாற்போல் பத்துத் தும்மல் போட்டதற்குக் கிடைத்த கூலி.

செல்வராக எடுக்கவில்லை என்று திரும்பத் திரும்பச் சொல்கிறான். ஆலை அம்மன் மேல் சத்தியம் செய்கிறான். அவனுக்குக் கோபம் வருமே தவிர பொய் வராது.

தேடலில்.. எப்பொழுதோ தொலைந்து போன அழிப்பான், துணுக்குப் பென்சில்கள்... அப்புறம் இது என்ன சீட்டு?

வெளிச்சத்திற்கு வந்து பார்த்தாள். இன்ன தென்று விளங்கவில்லை. தூக்கியெறிந்து விடலாம் என்று வெளியே வீசப் போனவள், சற்று நிதானித்தாள். இந்த மனுஷன் எதையாவது வாங்கி வைத்திருப்பாரோ? காணாமல் போய் விட்டால், குடியே மூழ்கி விட்டது போல் சத்தம் போடுவார். வந்ததும், கேட்க வேண்டும். அதுவரை பத்திரமாக எங்கே வைக்கலாம்? சட்டென்று புடைவைத் தலைப்பு ஞாபகம் வர முடிந்தாள்.

**நா**கேஷ் தியேட்டரை சுற்றி வரும்போது பிளாட்பாரத்தில் அந்தக் கடை கண்ணில் பட்டது. மர டேபிள். டேபிள் மேல் பலவித நிறங்களில் சீட்டுகள் பரப்பியிருந்தன. சுற்றிலும் கூட்டம்.

"யோவ், இது விழுந்திருக்கா...? பாருய்யா."

"இல்லை."

"இதற்கு?"

"ச்சு..."

பேப்பரில் இருந்த எண்களை நோட்டம் விட்டபடியே அவர் பதில் சொல்ல, ஏமாற்ற முகங்கள் விலக, விலகி, மீண்டும் வந்து சீட்டுகள் வாங்க...

இதே போன்று ஒரு சீட்டு தன்னிடமும் இருப்பதை கற்பகம் உணர்ந்தாள். இவரிடம் கேட்கலாமா? காட்டலாமா? சிறிது தயக்கத்திற்குப் பின் முடிச்சைத் தளர்த்தி...

சீட்டை கடைக்காரர் வாங்கிப் பார்த்தார். கையில் இருந்த பேப்பரில் எதையோ தேடினார். எண்கள், எண்கள், எண்கள் ஒரு விநாடி, இரண்டு விநாடி சந்தேகத்திற்கு ஒருமுறை பார்த்து...

"ஆயிரம் ரூபாய் விழுந்திருக்கு...!"

## அருள்வாக்கு



ரூபாய் என்று ஒன்று ஏற்பட்ட நாளாக சொந்தத்துக்கு ஜாஸ்தி சேர்த்து மூட்டை கட்டி வைத்துக் கொள்வது, தன்னுடைய துராசைகளுக்கே கன்னா பின்னா என்று செலவழிப்பது- இதெல்லாம் அதிகமாகி, தானதர்மங்கள் பண்ணுவதற்கும், அபரிக்ரஹ தர்மத்துக்கும் ஹானி உண்டாகி வந்திருக்கிறது. ரூபாய் என்று ஒன்று இல்லாத நாள் உண்டா என்று தோன்றலாம். அப்படி ஒரு நாள் இருந்திருக்கிறது. ஆதியில் எல்லா இடத்திலும் barter என்று ஒரு பொருளுக்குப் பதில் இன்னொரு பொருளை'எக்ஸ்சேஞ்ஜ்' (பரிவர்த்தனை) பண்ணிக் கொள்வதுதான் இருந்ததே தவிர ரூபாயோ ஸ்டெர்லிங்கோ டாலரோ இல்லை. அப்புறந்தான் ஒவ்வொரு சீமையிலும் ஸமுதாயங்கள் ஒரு அமைப்பாகக் கெட்டிப்பட்டு, அங்கங்கே ராஜாங்கம் தோன்றி ஒரு ஆட்சி முறையின் கீழே வந்த பிற்பாடு நாணயம், கரென்ஸி என்பது தோன்றிற்று. எந்தப் பொருளானாலும் இதைக் கொண்டு மதிப்பை நிர்ணயம் பண்ணுவது ஸுலபமாயிருந்து. கையடக்கமாக எடுத்துப் போகும் படியாகவும், வைத்துக் காக்கும்படியாகவும் இப்படி ஒன்றை ஏற்படுத்திக் கொண்டார்கள். ஆனாலும் ஈஸ்ட் இண்டியா கம்பெனி ஆட்சி வருகிறவரைகூட நம் நாட்டில் எல்லா ஜனங்களிடையேயும் விசேஷமாக நாணயப் புழக்கம் இருந்துவிடவில்லை. மேல் மட்டங்களில் சில கார்யங்களுக்கு மட்டுந்தான் நாணய மாற்றத்தில் கொடுக்கல் வாங்கல் நடந்தது. நாணயத்துக்கு நிஜமாகவே அதன் மதிப்பு இருக்கும்படியாகத் தங்கம், வெள்ளி இவற்றிலேயே இருந்ததால், அதிகமாகக் கிடைக்காத இந்த லோஹங்களில் அளவாகவே நாணயம் போடுவார்கள். அப்புறந்தான் நாணயத்துக்கும் அதன் மதிப்புக்கும் ஸம்பந்தமேயில்லாமல், நிக்கல், செம்பு, வெறும் காகிதம் என்று ஏற்பட்டபின் இஷ்டத்துக்கு அச்சடித்து எல்லோருக்கும், எல்லாவற்றுக்கும் விநியோகிப்பதாக ஆகிவிட்டது.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

"அப்படின்னா...?"

"ஆமாம்... ம்... இதை நீ வாங்கின மாதிரி தெரியல்லியே? யாரோட சீட்டு இது? உன் கிட்டே எப்படி வந்தது?"

"வீட்டிலே கிடந்தது. வீட்டுக்காரருக்கு இந்தப் பயித்தியம் நிறைய உண்டு. அவருதான் வாங்கியிருக்கணும்."

இவன் பேச்சில் நம்பிக்கைஇல்லாமல், அந்த சீட்டை மீண்டும் பரிசோதித்தார். திரும்பத் திரும்பப் பார்த்து...

"இதோட கூட்டுத் தொகை ஒம்போது வருது. நேத்து காலையிலே ஒரு பய வந்து வாங்கிட்டுப் போனான். பொடிப்பய... ஒல்லியா... ஒரு கண்ணு கொஞ்சம் ஒண்ணரைக் கண்ணு. ஸ்கூல் யூனிபார்ம் மாட்டியிருந்தான். பேரு கூட.... ம்.. வந்து!

"தங்கவேலு...?"

"ஆமாம், அப்படித்தான் ஏதோ..."

"என் மவனுங்க, அவன்."

"சீட்டை பத்திரமா வைச்சிரு. காலையிலே கொண்டா, பணம் கிடைக்கும்."

**வீ**ட்டில் நுழையும்போதே செல்வராக அந்த மாறுதலை உணர்ந்தான்.

வழக்கமான மூஞ்சித் தூக்கல் இல்லை. இடக்குப் பேச்சு இல்லை. சுடுகிற பார்வை இல்லை. கற்பகத்தின் முகத்தில் கலகலப்பு இருந்தது. சொல்லத் தெரியாத பூரிப்பு தெரிந்தது. இவனைப் பார்த்துச் சிரித்தாள்.

இந்தச் சிரிப்பின் அர்த்தம் தெரியாமல் அவன் குழம்ப...

"ஏங்க...! நம்ப பையன் 'யோகக்காரன்'னு அவன் பொறந்த அன்னிக்கே எங்க அய்யா சொன்னாரே, உங்களுக்கு நினைவு இருக்கா? 'ஒண்ணரைக் கண்ணே அதிர்ஷ்டம்'னு. 'தங்கவேலு'ன்னு பெயர் வை. அவன் தொட்டதெல்லாம் தங்கம் ஆகும்ன்னு... அப்படியே ஆயிடுச்சுங்க!"

"எப்படி...?"

"லாட்டரி சீட்டிலே ஆயிரம் ரூபாய் விழுந்திருக்கு, அவனுக்கு...!"

"என்னது? சீட்டா! யார் வாங்கினா?"

"அந்த அஞ்சு ரூபாயைக் காணோம்னு தேடிண்டு இருந்தேனா..." பேச்சு அறுபட்டது.



"நேத்து மேடையிலே பேசினப்ப ஏன்யா கலர் கொண்டு வந்துதரலை?"
"அப்பத்தான் கடுப்புல எதிர்க் கட்சித் தலைவரைத் தாக்கி இன்னும் ரெண்டு வார்த்தை கூட பேசுவீங் கன்ற நல்லெண்ணம்தான் தலைவரே!"
– ஜி. செல்லத்துரை

கற்பகம் திக்கித் திணறினாள். 'நீதான் திருடிட்டே...' என்று இவன் மேல் பழி சொல்லியது மனதில் நிரட... "வந்து... ம்... அதை நம்ப தங்க வேலு எடுத்திருக்கணும்... எடுத்து சீட்டு வாங்கி..."

"பரிசு விழுந்திருக்குன்னு அவனுக்குத் தெரியுமா?"

"தெரியாது. சொல்லல்லே. அவன் இன் னும் வரல்லே. விளையாடிட்டு வருவேன்'னு..."

செல்வராசு அந்த லாட்டரி சீட்டை எடுத்து, ஒருமுறை முழுமையாகப் பார்த்தான்... ஒரு வேதனைச் சிரிப்பு அவன் முகத்தில் தோன்றி மறைய...

ஒரு விநாடி...ஒரே விநாடிதான்...!

அந்தச் சீட்டை இரண்டாக மடித்தான். நாலாக்கினான். எட்டாக்கினான். ஆட்காட்டி விரலுக்கும் கட்டை விரலுக்கும் இடையில் பிடித்து, 'சர்'ரென்று கிழித்தான். சுக்கு நூறாக்கினான். விட்டெறிந்தான்!

"என்னங்க... உங்களுக்குப் பயித்தியம் பிடிச்சிடுத்தா...? ஒரு ரூபாய்க்கும் அரை ரூபாய்க்கும் நாம ஆலாப் பறக்கிறோம். அல் லாடறோம். சுளையா ஆயிரம் ரூபாய்! ஜென் மத்திலே பார்க்க முடியுமா? ஊரைச் சுத்தி கடன் இருக்கு. எத்தனை செலவு இருக்கு? வலிய வந்த பணம். நம்ப பஞ்சம் விடியணும்னு கடவுளாப் பார்த்து கொடுத்திருக்காரு. பாவி மனுஷா... அதைப் போய்...!"

"கடவுளா கொடுத்திருக்காரு...?" செல்வராசு விரக்தியுடன் சிரித்தான். "அவரு, நல்லது கெட்டது தெரிஞ்சுக்க, அறிவைக் கொடுத் திருக்காரு...!"

அடக்க முடியாமல் கற்பகம் அழுதாள் எழுந்து. ஆத்திரத்துடன் அவன் சட்டையைப் பிடித்து உலுக்கினாள்.

"ஏன்யா... நீயும் எத்தனை வருஷமா இப்படி பறக்கிறே? ஏதாவது அதிர்ஷ்டம் அடிக்காதா, அடிக்காதான்னு அலையறே... உனக்கு ஒண்ணும் விழல்லே! உன் ஜாதகம் அப்படி. அந்தக் குழந்தை... சொந்தப் புள்ளே. அவ னுக்கு விழுந்திருக்கிறதை உன்னாலே தாங்க முடியல்லியே! ஆத்திரம் வந்துடுத்தே. அவனுக்குத் தெரியுமான்னு கேட்டு, பித்துக் கொள்ளித்தனமா கிழிச்சு..."

"அவன் நல்லதுக்குத்தான் செஞ் சேன்...!" செல்வராசு அவளை மெதுவாக விலக்கினான்.

"கற்பகம். என்னை நம்பு. சின்ன வயசிலே இவனை மாதிரியே எனக்கும் ஒரு குருட்டு அதிர்ஷ்டம் அடிச்சுது. குறுக்கு எழுத்துப் போட்டியிலே...! 'அதிர்ஷ்டக்காரண்டா நீ...'ன்னு எல்லோரும் தூண்டி விட்டாங்க. தட்டிக் கொடுத்தாங்க. மனசிலே ஆசையை விதைச்சாங்க. அப்புறம்; தினமும் சாப்பிடற மாதிரி, தூங்குகிற மாதிரி... பொழுதுவிடிஞ்சா, 'அதிர்ஷ்டம் அதிர்ஷ் டம்'னு அதைத் தேடறதே பிழைப்பா போச்சு. சொத்து போச்சு, சுகம் போச்சு... ஓட்டாண்டி ஆகி...! கெடுதல்னு தெரிஞ்சும் இப்பவும் இதை விட முடியல்லே. எத்தனை வருஷத்துப் பழக்கம்! தொட்டில் பழக்கம். போகல்லே. போகாது. சாகிறவரை விடாது! இது ஒரு வெறி மாதிரி. பிசாசு மாதிரி என்னைப் பிடிச்சிருக்கு. அந்தப் பிசாசு என் மகனையும் பிடிக்கணுமா? என்னை மாதிரியே அவனும் அதிர்ஷ்டத்தைத் தேடி அலையணுமா? சொல்லு. இந்த ரூபாய் போனால் போகட்டும்... இதற்கு சபலப்பட்டு அனுமதிச்சா... நஷ்டம் அவனுக்குத்தான்! பின்னாடி நாசமாப் போயிடுவான். கூடாது. அப்படி விடக்கூடாது. இந்த எண்ணமே அவனுக்கு வரக்கூடாது. அவன் வந்தால் கண்டிச்சு வை. இனிமேல் இந்த மாதிரி பண்ணினால்... வேண்டாம், இப்ப அவன் செஞ்ச காரியத்துக்கே கையிலே சூடு போடு, அடையாளம் தெரிகிற மாதிரி நல்லா விளாசு...!"

தூங்குகிறவனை மெனக்கெட்டு எழுப்பி, "சக்கரைப் பொங்கல் ஆயிடுத்து...! உன் வரைக்கிலும் வரல்லே, ச்சு...!" என்று கேட்ட ஏமாற்றம் அவளுள் படர்ந்தது.

இருந்தும் கொஞ்சம் நம்பிக்கை...

இருளுக்கு அப்பால்... வெளியே, தொலை தூரத்தில் ஓர் ஒளிக்கீற்று. அது, அடுத்த தலைமுறைக்காவது வழிகாட்டும்...!



• ஆச்சர்யம்....









• மாச்சர்யம்!

● அவ்வை. கே. சஞ்சீவபாரதி, கலிங்கியம்.

? மேயர் மு.க. ஸ்டாலினுக்கு நீங்கள் கூறும் அட்வைஸ்...?

! ஜால்ராக்களைக் கிட்டே சேர்க்காதீங்க!

● எஸ். ஏ. என். செந்தில்குமார், சூலூர்.

? 'உழைப்பாற்றலில் ஆசியாவிலேயே சிறந்த நாடு இந்தியா' என்று லண்டனின் எகானமிஸ்ட் பத்திரிகையின் ஆய்வு கூறியுள்ளது பற்றி?

! இருக்கலாம். ஆனால் அந்த உழைப் பாற்றலைப் பயன்படுத்திக் கொண்டு நாட்டை முன்னேற்றுவதில் பின்தங்கியல்லவா

# இனி 'பங்களா' எதற்குப் பயன்படும்?

இருக்கிறோம்!

● டி. பசுபதி, ஊஞ்சவேலாம்பட்டி.

? 'பூனைக்குப் பத்து லட்சம் செலவில் திருமணம் நடந்தது' போன்ற செய்திகளைப் படிக்கும்போது மனத்தில் என்ன தோன்றும்?

! மிகவும் கேவலம்! 'அந்தப் பூனைக்குக் கண்ணில் பூ விழுந்திருக்கிறது. எனவே அதிர்ஷ்டம்' என்ற மூடநம்பிக்கையில் கல்யாணத்தை தாம் தூம் என்று நடத்தியது ரொம்ப ரொம்ப கேவலம்!

● எஸ். ராஜகோபாலன், சென்னை - 61.

? மேயர் ஸ்டாலினை தமிழ்க் குடிமகன் எப்படி விளிப்பார்?

! நகரத் தந்தை இசுட்டாலின்?!

● கே. அன்புமதி கோபிநாத், கொப்பம்பட்டி.

? கல்வியில் காலத்துக்கேற்ற சில அதிரடி மாற்றங்களைக் கொண்டு வரலாம் என்று நினைக்கிறேன். தாங்கள் என்ன சொல்கிறீர்கள்?

! தாராளமாகக் கொண்டு வாருங்கள். வாசகர் யோசனைகளை கல்கி என்றும் ஏற்கும். தகுதியானவற்றைச் செயலாக்கும்.

● ஏ. காதர், நாகூர்.

? இனிமேலாவது சாலைகள், சாக்கடைகள், குடிநீர் வசதி, தெருவிளக்குகள் என அனைத்து அடிப்படை வசதிகளும் ஒழுங்கு பெறுமா?

! உங்கள் வட்டாரக் கவுன்சிலரை நீங்கள் முடுக்கி விடுவதைப் பொறுத்துத்தான் பலன் இருக்கும்.

● தேவாஸ், கடலூர்.

? ஊழல் செய்த மூன்று பேருக்கு சீனாவில் மரண தண்டனை விதித்துள்ளார்களே?

! ஜனநாயக உணர்வூட்டிய மாணவர் தலைவர்களுக்குக் கடுமையான சிறைத் தண்டனையல்லவா வழங்கப்பட்டிருக்கிறது! எனவே ஊழலுக்கு மரண தண்டனை என்பது சீனாவில் அதிசயமில்லை.

● டி. வரதன், மன்னார்குடி.

? இம்ரான்கான் டிக்கெட்

எடுத்துக் கொடுத்தால் பாக்கிஸ்தானில் தேர்தல் நடத்தத் தயார் என்கிறாரே சேஷன்?

! பேனசிர், வாயில் விரல் போட்டுக் கொள்ளும் பாப்பாவாக இருந்தால் நடக்கும்!

● ஜே. கண்ணன், சென்னை – 101.

? ஐக்கிய முன்னணிக்கு காங்கிரஸ் ஆதரவு அளித்திருப்பது பஸ்மாசுரனுக்கு சிவபெருமான் வரம் கொடுத்த கதையை நினைவுபடுத்துவதாக அத்வானி கூறியிருக்கிறாரே?

! வி.எச்.பி., பஜ்ரங்தாள் – பி.ஜே.பி. தொடர்புகளுக்கும் புராணங்களிலிருந்து உவமை கூறுவது ஒன்றும் கஷ்டமில்லை!

● ஜெ. ரஜினி ராம்கி, மயிலாடுதுறை.

? இந்திய மீனவர்கள் பணத்தை வாங்கிக் கொண்டு இலங்கை அகதிகளை அழைத்து வருவதாகச் சொல்லப் படுகிறதே...?

! அகதிகளை அழைத்து வருவது குற்றம் ஆகாது; மனிதாபிமானச் செயல்! அவர்களிடையே போராளிகள் ஊடுருவியிருக்கிறார்களா என்று கண்காணிப்பது மாநில அரசின் கடமை.

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.

? நியூஸ் பிரிண்ட் காகிதத்தின் விலை தற்போது எந்த நிலையில் உள்ளது சார்...?

! ஏறுமுகத்தில்!

● ஆர். பி. ஜெயச்சந்திரன், பூனாம்பாளையம்.

? உ.பி.யில் ஆட்சி அமைப்பதில் இவ்வளவு இழுபறி ஏன்...?



• உவமைகள் உண்டு



• பறிபோன நம்பிக்கை



• ஸ்டாலின்!

• இவர் டிக்கெட் தந்து



• இவர் ஏமாந்தால்



• இவர் போனார்!



! ஜனநாயக அமைப்பில் பத்திரிகையாளர்களை அடிக்கவரும் தலைவர் நல்லாட்சி வழங்க மாட்டார் என்று, அவருக்கு அணுக்கமாக நேற்றுவரை இருந்தவர்கள் உள்பட பலரும் உணரத் தொடங்கி விட்டதுதான்.

● என். ராஜி, தரங்கம்பாடி.

? இந்திய கிரிக்கெட் அணியில் பேட்டிங் மாற்றம் தேவையா? பந்து வீச்சில் மாற்றம் தேவையா?

! ஆட்டக்காரர்களிடம் மனமாற்றம் தேவை. தனித்தனியாக அவர்கள் ஆச்சர்யம். ஓர் அணியாகத் திரளும்போது மாச்சர்யம்! தென்னாப்பிரிக்காவின் விஞ்ஞான ரீதியான விளையாட்டுக்கெதிரே எப்படி நிற்க முடியும்!

● ஈ.டி. விஜயகுமார், ஈரோடு. ☐

? 'ஜெ'யின் தோழி வாங்கிய பங்களா இனி எதற்குப் பயன்படும்?

! ஐந்து நட்சத்திர ஓட்டலாக்குவது தொழில் சிந்தனை; ஷூட்டிங்குக்கு வாடகைக்கு விடுவது வியாபார சிந்தனை; தமிழகத்தின் சிறந்த கலைப் படைப்புகளைச் சேகரித்து வைத்து, மாமல்லபுரம் போகும் போது அல்லது வரும்போது அயல்நாட்டு டூரிஸ்டுகள் கண்டுகளிக்க வசதி செய்வது ரசிக உள்ளத்தின் சிந்தனை.

● மு. கருணாநிதி, தேவராயனேரி.

? மேயர் ஸ்டாலின் சட்டமன்ற உறுப்பினர் ஸ்டாலின் – உங்களைக் கவர்ந்த ஸ்டாலின்?

! மக்களின் குறை அறிந்து நிவர்த்திக்க வேண்டும் என்று முயற்சி மேற்கொள்ளும் ஸ்டாலின்.

●ஆர். ராமசுப்ரமணியன், வடவள்ளி.

? ஜெ-சசி கூட்டம் பற்றித் தினம் தினம் வெளிவரும் கொள்ளைகளைப் பார்த்தால் ஐயோ, இடையில் வழக்குகளை அம்போ

☐ ரூ. 25 பரிசு பெறுபவர் :
ஈ.டி. விஜயகுமார்,
23, வடக்கு பெருமாள் கோயில் வீதி,
ஈரோடு – 638 001.

என்று விட்டுவிடாமல் இருக்க வேண்டுமே என்ற பதைப்பு ஏற்படுகிறதல்லவா?

! ஆமாம். பதினெட்டு கோடி ரூபாய் இலவச வேட்டி-சேலை ஊழலில் இப்போது மதுசூதனனும் மாட்டிக் கொண்டிருக்கிறார். வக்கீல் விஜயன் தாக்கப்பட்ட வழக்கைப் பார்த்தபிறகு, எந்த அளவுக்கு இவர்கள் மேல் உள்ள குற்றச்சாட்டுகள், நிரூபிக்கப்பட்டு, தண்டனை பெற போகிறார்கள் என்கிற சந்தேகம் வருவதைத் தவிர்க்க முடியவில்லை.

# எதிர்நீச்சல் :

மயிலாப்பூர் லஸ் கார்னரில் பிள்ளையார் எத்தனை பிரசித்தமோ, அத்தனை பிரசித்தம், அங்கே பக்கிங்காம் கால்வாய்க் கரையோரம் இருக்கிற குடிசைக் குடியிருப்புகள். சாக்கடையும் துர்நாற்றமும் குப்பை மேடும் வாகன இரைச்சலுமான அந்தப் பகுதி, 'குடிமகன்' களின் ராஜ்ஜியம். இரவுகள் தவறாது நடக்கும் சாராயச் சண்டைகள்; தூய மெட்ராஸ் தமிழ் வசவுகள்.

அங்கே ஒரு குடிசையில் குடியிருந்தார் ஓர் இளைஞர். இதர குடிமகன்களுக்கும் அவருக்கும் சம்பந்தமில்லை. இரவு பத்து மணிக்கு மேல் காடா விளக்கை வைத்துக் கொண்டு படம் வரைந்து கொண்டிருப்பார்.

அங்கே குளியல், பிற அற்ப சுத்திகளுக்கெல்லாம் வானமே ஸீலிங். அதனாலே அங்கிருப்பவர்கள் குளிப்பதெல்லாம் வெகு அபூர்வம்.

ஆனால் அந்த இளைஞர் வேறுவித அபூர்வப் பிறவி. குளிப்பதற்குத் தேவை தண்ணீர்; கூரையல்லவே? தினமும் குளித்து, எப்போதும் பளிச்சென்று இருப்பார்.

பிறப்பால் அவர் குடிசைவாசி அல்ல. புதுக்கோட்டையில் ஒரு பள்ளி ஆசிரியரின் மகனாகப் பிறந்து, நடுத்தரக் குடும்ப வாழ்க்கையிலிருந்து விரும்பி ஓடி வந்து இந்தக் குடிசைவாழ்க்கையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டவர். காரணம்? ஓவியராகிற வெறி; வேகம். இலட்சியத்துக்காக எத்தகைய துன்பங்களையும் பொறுத்துக் கொள்கிற திடம்.

மகன், கல்லூரியில் சேருவான்; பட்டம் பெற்று நல்ல பணி ஒன்றில் அமர்வான் என்று கனவு கண்ட தந்தைக்கு நம்பிக்கை சொல்லி, அவர் கையாலேயே சென்னைக்கு டிக்கெட் வாங்கிப் பெற்று வந்து சேர்ந்தவர் அவர். பெயரைச் சொல்லி விடுவோமே? ரங்கநாதன்.

ஓவியம் வரைகிற ஆசை, ரங்கநாதனுக்குச் சிறு வயதிலிருந்தே தொற்றிக்கொண்ட விஷயம். வாடகை வீட்டுச் சுவர்களிலெல்லாம் வண்ணப்படங்களாக வரைந்து தள்ளியவர். நல்ல காலம், வீட்டுக்காரார் வெளியே துரத்தவில்லை.





மாறாக, "உனக்கு நன்றாகப் படம் போட வருகிறது; சுவரில் வரைந்தால் – வெள்ளையடித்தால் வீணாகிவிடும். தாளில் வரை" என்று அட்வைஸும் தந்திருக்கிறார்.

அப்போது புதுக்கோட்டையில் படம் வரைவதற்கான உபகரணங்கள் கிடைப்பது மிகவும் கஷ்டம். கிராமமும் இல்லாமல், நகரமும் இல்லாமல் ஒரு இரண்டுங்கெட்டான் ஊர் அது!

நண்பர்களிடம் இரவல் வாங்கியே வரைந்து பழகினார்

ரங்கநாதன்.

பள்ளி நாட்களில் விருப்பப்பாடமாக ஓவியம் அல்லது இந்தி இருந்திருக்கிறது அவருக்கு.

ரங்கநாதன் தேர்ந்தெடுத்தது ஓவியமல்ல – இந்தி!

காரணம், இந்தி வகுப்பில் 'படிக்கும்' பிள்ளைகளுக்குத் தொந்தரவு தராமல் கடைசி வரிசையில் அமர்ந்து படம் வரையக் கிடைத்த சௌகர்யம்தான்!

படம், படம் என்று வரைந்து கொண்டே இருந்தால் படிப்பு? பத்தாம் வகுப்பில் ஃபெயில்! மறுபடி எழுதி, தேறுவதற்குள் அவர் ஒரு குறிக்கோளை வைத்துக் கொண்டார்.

ஏற இறங்கப் பார்த்துவிட்டு, ஒரு சம்பவத்தை விளக்கி, படம் போட்டுக் கொண்டு வரச் சொல்லியிருக்கிறார் எஸ்.ஏ.பி.

படத்துடன் போன ரங்கநாதனிடம், "வடிவம் வந்திருக்கிறது; ஆனால் 'வாஷ்' போதாது" என்று சொல்லிவிட்டு மேலும் சீராக்க சில ஐடியாக்களையும் தந்து, ஒரு சிறுகதையையும் கையோடு தந்தனுப்பியிருக்கிறார், படம் போட.

முதல் படம் குமுதத்தில் வெளிவந்ததும் அதற்குப் பத்து ரூபாய் சன்மானம் கிடைத்ததும் இன்னும் ரங்கநாதனுக்குப் பசுமையான நினைவுகள்.

# வெறி * வேகம் = வெற்றி!

மேலே படித்தால் ஓவியக் கல்லூரிதான்! தந்தை அதற்கு உடன்படாததால் ராஜா கல்லூரியில் பி.யூ.சி. சேர வேண்டி வந்தது!

ஆனால், ஒரு நல்ல ஓவியனை ஏன் வீணடிப்பானேன் என்கிற நல்லெண்ணமோ என்னவோ – பியூ.ஸி. படிப்பு அவரிடமிருந்து விலகியே இருந்தது. ஆகவே, வெற்றிகரமான தோல்வி!

ரங்கநாதன், தம் தந்தையிடம் பேசி, அனுமதி பெற்று, சென்னைக்கு ரயிலேறியது இதன் பிறகுதான்!

சென்னையில் அவருக்கு ஒரு சுவரொட்டி விளம்பரம் தயாரிக்கும் நிறுவனத்தில் வேலை கிடைத்தது. அங்கும் படம் வரையும் வாய்ப்பில்லை. 'லெட்டரிங்' பணிதான்.

ஆனால் அவரது விருப்பமும் குறிக்கோளும் மாறவில்லை. சிறந்த ஓவியனாக வேண்டும். அதற்கு என்ன செய்ய வேண்டும்?

அப்போது சிந்தாதிரிப்பேட்டையில் இயங்கி வந்த குமுதம் அலுவலகத்துக்குப் போய் எடிட்டர் எஸ்.ஏ.பி.யைச் சந்தித்து, வாய்ப்புக் கேட்டார் ரங்கநாதன்.

ரங்கநாதன், பத்திரிகைகளில் படம் போடத் தொடங்கியது, அவர் வேலை பார்த்த விளம்பர போஸ்டர் நிறுவனத்துக்குப் பிடிக்கவில்லை. அதனால் 'மாருதி' என்ற புனைபெயரில் ஒளிந்து கொண்டு வரைய ஆரம்பித்தார். மேலும் அந்நிறுவனம் நஷ்டம் காணத் தொடங்க, ரங்கநாதனுக்கு வேலை போயிற்று.

குமுதம் உள்ளிட்ட சில பத்திரிகைகளில் படம் வரைந்து கிடைத்த வருமானத்தில் கால், அரை, முழு வயிறு – அவ்வப்போது கிடைப்பதற்கேற்ப சாப்பிட்டுக் கொண்டு, குடிசை வீட்டில் உட்கார்ந்து படம் வரைந்து கொண்டிருந்தார் ரங்கநாதன்.

அவ்வப்போது சினிமா டைட்டில் கார்டு எழுதும் வேலை கிடைத்து, ஏதாவது வருமானம் வரும். சில நாட்கள் முழுப் பட்டினி கூட இருந்திருக்கிறார். அப்போதும் ஊரிலிருந்த தந்தையிடமிருந்து உதவி பெறுகிற எண்ணம் வரவில்லை.

உடன்பிறந்த மூத்த சகோதரர் ஒரிஸா மாநிலத்தில் ஹிராகுட் அணைத் திட்டத்தில் நல்ல வேலையில் இருந்தார். தம்பியின் அவல வாழ்க்கையைக் கண்டு சகிக்காமல், "நீயும் என்னுடன் வந்து விடு; இங்கேயே உனக்கும் ஒரு வேலை வாங்கித் தந்து விடுகிறேன்" என்று

# கல்கி - அனுபவ் குரூப் இணைந்து நடத்திய கவிதைப் போட்டி முடிவு!

**முதல் பரிசு - ரூ. 10,000 :**

**காற்றுக்கு உயிர் போகிறது...**

எழுதியவர் : இரா. பச்சியப்பன் (குருநாதன்)
5/381, விவேகானந்தர் தெரு,
பொன்னி நகர், காரம்பாக்கம்,
போரூர், சென்னை – 600 116.

**இரண்டாம் பரிசு – ரூ. 5,000 :**

**அவசரம் ஓர் அசுர ஊர்தி**

எழுதியவர் – சு. தாமரை,
22, சுகந்தி லே-அவுட்,
கிங்ஸ் காலனி,
வீரகேரளம், கோவை – 641 007.

**மூன்றாம் பரிசு – ரூ. 3,000 :**

**புவி, குப்பைத் தொட்டியா?**

எழுதியவர் : நா. வே. அருள்
13, மேற்கு ஜோன்சு சாலை,
சைதை, சென்னை – 600 015.

ஆறுதல் பரிசாகத் தலா ரூ. 1000 பரிசு பெறுபவர்கள் :

*1. என். பாஸ்கர்,
பிளாட் நெ. 17,
சீனிவாச நகர் விஸ்தரிப்பு,
திருவானைக் கோவில்,
திருச்சி – 620 005)*

*2. மதுமிதா,
(பி. சந்தான கிருஷ்ணன்),
204, தமதமா மேடை,
மேலவீதி,
தஞ்சாவூர் - 613 009.*

*3. ஆ. முருகேசன்
லெண்டேல் எஸ்டேட்,
குன்னூர் அஞ்சல், நீலகிரி - 643 102.*

வந்திருந்த ஆயிரக்கணக்கான கவிதைகளை கல்கி ஆசிரியர் குழுவினரோடு சேர்ந்து பரிசீலித்துப் பரிசுக்குரிய கவிதைகளைத் தேர்ந்தெடுத்துத் தந்தவர் கவிஞர் தமிழன்பன்.

போட்டியில் கலந்து கொண்ட ஆயிரக்கணக்கான வாசகர்களுக்கும் கவிஞர் தமிழன்பனுக்கும் கல்கி ஆசிரியர் குழுவின் மனமார்ந்த நன்றி.

---

கூப்பிட்டுப் பார்த்தார்.

ஆனால் பிரஷ் பிடித்த கரமும் வண்ணங்களில் வாழ்ந்த மனமும் அதற்கு ஒப்புக் கொள்ள மறுத்து விட்டதாக ரங்கநாதன் சொல்கிறார்.

அமரர் கே. மாதவனை ஓவியத் துறையில் தம் மானசீக குருவாகக் கொண்ட ரங்கநாதன், பயிற்சி பெறுவதற்காக ஓவியர் ஆர். நடராஜனிடம் சேர்ந்தார், பிறகு. வித்தியாசமான பயிற்சி; எடுபிடி வேலை!

தாம் படம் வரையும் போது அருகிலிருந்து பார்க்க அனுமதித்தது மட்டுமே நடராஜன், ரங்கநாதனுக்கு அளித்த பயிற்சி. (அதுவே அவருக்குப் போதுமானதாக இருந்தது வேறு விஷயம்.) குருதட்சணையாக அதற்கு இவர் வண்ணங்கள், காகிதம் வாங்கி வந்து தருவது, அவர் வரைந்த படங்களைப் பத்திரிகை அலுவலகங்களுக்குக் கொண்டு போய்த் தருவது போன்ற பணிகளைச் செய்து கொண்டிருந்தார். "சம்பளம் எதுவும் வாங்க மாட்டேன் என்று ஆரம்பத்திலேயே கறாராகச் சொல்லி விட்டேன்!" என்கிறார் ரங்கநாதன்.

இயல்பிலேயே இருந்த அசாத்தியமான ஓவிய ஆற்றல், நடராஜனிடம் கவனித்துப் பெற்ற அனுபவ அறிவு, அவரது வழிகாட்டல், குமுதம் ஆசிரியரின் அரவணைப்பு, கொடுத்த வாய்ப்புகள் எல்லாம் சேர்ந்து ரங்கநாதனைத் தமிழகமே பாராட்டும் சிறந்த ஓவியராக மலர வைத்தன!

"செக்ஸியாகப் படம் போடாதே!" என்று எஸ்.ஏ.பி. அன்று சொன்னதை இன்றளவும் கடைப்பிடிக்கும் ரங்கநாதன், இன்று தமிழகத்தின் தலைசிறந்த பத்திரிகை ஓவியர்களுள் ஒருவர். ரங்கநாதன் என்றால் வாசகர்களுக்குப் புரியாது; மாருதி என்றால்தான் புரியும்!

**- சுப்ர. பாலன்**

# TV மர்சனம்



●● ஒரு கொலை நடந்து விடுகிறது. அந்தக் கொலையாளியைக் கண்டு பிடிக்கத் தேவையான தடயங்களை எப்படியெல்லாம் சேகரிக்க வேண்டும்? இதை விளக்குவதற்காகவே டிஸ்கவரி சேனலில் ஒரு நிகழ்ச்சியைக் காண்பித்தார்கள். ஒரு கொலை நிகழ்ந்தவுடன் கொலை செய்யப்பட்ட உடலும் அதன் சுற்றுப்புறத்திலுள்ள ஒவ்வொரு சிறு விஷயமும் கூட தடயங்களைத் தரும் என்பதால், கொலை நடந்தவுடனேயே ஸ்தலத்துக்குச் செல்வது போலீஸ் அல்ல. உடனடியாக அந்த இடத்துக்குக் கைரேகை மற்றும் பல்வேறு துறைகளைச் சேர்ந்த நிபுணர்கள்தாம் செல்கிறார்கள். அவர்கள் தங்கள் வேலையை முடித்துக் கொண்ட பிறகுதான் போலீஸார் சென்று பார்த்து அவர்களின் கடமையைச் செய்கிறார்கள். அதனால் கொலையாளியை அடையாளம் காட்டும் தடயங்களைச் சுலபமாகச் சேகரிக்க முடிகிறது. ஆனால் நம் ஊரில்? எல்லாமே தலைகீழாக இருப்பதால்தான் பல கொலைகளில் கொலையாளிகளைக் கடைசிவரை கண்டு பிடிக்க முடிவதில்லையோ, என்னவோ! அரசு உடனடியாக கவனிக்க வேண்டிய விஷயம் இது.

●● விஜய் டி.வி. 'ஹலோ வி.ஐ.பி.'யில் பிரபஞ்சன் பதிலளித்தார். திருத்துறைப்பூண்டியிலிருந்து ஒரு நேயர் கேட்ட கேள்வி : ரபி பெர்னாடை சாடிலைட் டி.வி.யின் தந்தை என்று சொல்லலாமா?

பிரபஞ்சனின் சாமர்த்தியமான பதில் : நீங்கள் அப்படி அழைக்க விரும்பினால் தாராளமாக அழையுங்களேன்!

●● சன் டிவிக்கு யாராவது வயிறெரிந்து சாபம் கொடுப்பார்களென்றால், சந்தேகமில்லாமல் அது தமிழ்த் திரைப்படத் தயாரிப்பாளர்களாயிருக்கும். பத்திரிகைகள் மட்டுமே செய்து வந்த சினிமா விமர்சனத்தை இப்போது சன் டிவியும் எடுத்துக் கொண்டு விட, வெள்ளிக்கிழமை திரை விமர்சனத்தில், வாரம் ஒரு படமாகப் பிடித்து நார்நாராகக் கிழித்து விடுகிறார்கள். ஆங்காங்கே அபத்தம் பட்டொளி வீசிப் பிரகாசிக்கும் சில காட்சிகள் வேறு 'கிளிப்பிங்'காக!

இந்த வாரம் அப்படி மாட்டிக் கொண்ட படம், ராமராஜனின் 'நம்ம ஊரு ராசா'. மிகவும் வழக்கமான மாரியாத்தா டான்ஸ், அப்பாவி ஹீரோவை போலீஸ் கைது செய்தல், ஊர் மக்கள் சாபம், ஹீரோ திரும்பி வந்து என்ன பண்ணுகிறார் என்பதான இரண்டரை மணி நேரக் கதையை வடிகட்டி, சாறெடுத்து, பத்து நிமிடத்தில் காட்டி விட்டார்கள். இதற்குப் பிறகும் யாரும் விரும்பி தியேட்டருக்குப் போவார்கள் என்று தோன்றவில்லை.

யாரோ எழுதிக் கொடுத்த விமர்சனம்தான் என்றாலும் உமா பத்மநாபன் அதை ராகம் போட்டுப் படிக்கிற அழகே அலாதி.

●● சனிக்கிழமை காலை ஆறு மணிக்கு தூர்தர்ஷனில் வீணை காயத்ரியை ரொம்ப நாளைக்கப்புறம் பார்க்க முடிந்தது. காயத்ரியின் வாசிப்பு மட்டுமல்ல; சட்சட்டென்று கேமராவைப் பார்த்து அவர் சிந்தும் புன்னகையும் கட்டிப் போடவே செய்கிறது.

ஆனால் எழில் கொஞ்சும் ரீதிகௌளையை என்னத்துக்காக அந்த ஓட்டம் ஓட விட்டார் என்றுதான் புரியவில்லை. சில ராகங்களை ஓட விடலாம். சிலவற்றை நடக்க விடலாம். ரீதிகௌளை போன்றவை தவழ்ந்தால்தான் சுகம். அடுத்த மத்யமாவதியைக் கொஞ்சிக் கொஞ்சிக் குழைய விட்டதற்காக முந்தைய ஓட்டத்தை மன்னிக்கலாம்!

●● "வால்குடி - திருச்சிக்கு அருகே ஒரு ஊர்; மாங்குடி கும்பகோணத்துக்கருகே... இதைப் போன்ற நிஜ ஊர்களைக் கதைக் களனாக்கும்போது, வாசகர்கள் 'அங்கே இந்தக் கடை இருக்காது; நதி ஓடாது...' என்று குற்றம் கண்டுபிடிக்க ஆரம்பிப்பார்கள். எனவே வால்குடியையும் மாங்குடியையும் இணைத்து

# ரத்தினச் சுருக்கமாக ஸ்டாலினுக்கு அறிவுரை!

✉ "சென்னை நகரத்தை சிங்கப்பூர் ஆக்குவேன்" என்று தேர்தல் பிரசாரத்தின் போது உறுதியளித்து வெற்றி பெற்ற மு.க. ஸ்டாலின் அவர்களுக்கு, "நகரிலும் தூய்மை; நிர்வாகத்திலும் தூய்மை"யென ரத்தினச் சுருக்கமாகச் சொல்லி 'மேயர் ஸ்டாலி'னை ஊக்குவித்த கல்கிக்குப் பாராட்டுக்கள்!
சென்னை – 23, இ. ராமதாஸ்.

✉ தலையங்கத்தில் கூறிய வரிகள் மேயர் ஸ்டாலினுக்கு மட்டுமல்ல; அனைத்து நகர்மன்ற உறுப்பினர்களுக்கும் பொருந்தும்!
சிதம்பரம், த. கு. பா. பட்டுதுரை.

✉ 'ஹலோ சுகமா?' கட்டுரைத் தொடர் முற்றுப் பெற்றது வருத்தத்தைத் தருகிறது. தொற்றுநோய் பரவும் காலத்தில் தொலைக்காட்சியில் தீவிர முகத்துடன் மருத்துவத் தகவல் தருகிற மருத்துவரைப் போலல்லாமல், இயல்பாக – ஓய்வான மாலை நேரத்து அரட்டையாக அரிய செய்திகளைச் சொன்ன கமிக்குப் பாராட்டுக்கள்.
சென்னை – 43, வி. பிரசன்னகுமார்.

✉ ஒரு மாபெரும் கவிஞரின் மகள் விசாலி கண்ணதாசனுக்கே தமது வாழ்க்கை முன்னேற்றம் பற்றி இத்தனை ஆதங்கம் இருக்கிறதென்றால், ஒரு சாதாரணக் கவிஞனுக்கு எத்தனை, எத்தனை பிரச்னைகள் இருக்கும்!
சென்னை – 29, பழங்கூர் மீரா முருகன்.

✉ 'குப்பையில் கிடைக்குதுங்க கோடி ரூபாய்' கட்டுரை கண்டேன். முதல்வர் இதை உடனே சிரமேற்கொண்டு செயல்படுத்த வேண்டியது அவசியம். இதன் மூலம் சுற்றுச் சூழல் பாதுகாக்கப்படுவதுடன் கோடிக்கணக்கில் பணமும் அரசுக்கு மிச்சமாகும். கவனத்தில் கொள்வார்களா?
சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்.

✉ பத்மப்ரியாவின் உள்ளக் குமுறலில் நியாயம் இழையோடியதை யாரும் மறுக்க முடியாது. அவருடைய ஆதங்கத்தில் நானும் மானசீகமாகப் பங்கேற்கிறேன்.
சென்னை – 61, எஸ். ராஜகோபாலன்.

✉ நூறாவது நாளைத் தாண்டாமல் போனாலும் 13 வாரங்கள் வந்து பிரமிக்க வைத்த 'கடலோரக் கொலைகள்' சித்திரத் தொடர், திரையில் வண்ணப்படம் பார்த்தது போன்ற மகிழ்ச்சியை உண்டாக்கியது.
சென்னை – 39, சிம்மவாகினி.

✉ பேசும் விரல்களின் சொந்தக்காரர் கஞ்சிரா லதா ராமாச்சார், அசைவம் தொடாத கிராமம் கிருஷ்ணசந்த் சோர்டியா மற்றும், ஓர் ஆசியக் கனவு மஞ்சுளா ஆகியோரின் வியப்பில் ஆழ்த்திய வித்தியாசமான சாதனைகளை வெளியிட்டு, புதுமைக்கு மறுபெயர் கல்கி என்பதை மறைமுகமாக எடுத்துக்காட்டி விட்டீர்கள்.
பெங்களூர் – 47, மு. புஷ்பராசன்.

**வாசகர்கள் கவனத்திற்கு....**

**தபால்-தந்தி இலாகாவினரின் வேலை நிறுத்தம் காரணமாக வெளியூர் வாசகர்களின் கடிதங்களை அதிகம் பிரசுரிக்க இயலவில்லை. ஜாலி போட்டி – 12-ன் முடிவு அடுத்த வாரம் வெளியாகும்.**

---

மால்குடியை உருவாக்கினேன்" என்கிறார் ஆர். கே. நாராயணன். கதாபாத்திரத்தை உருவாக்கும் கவனம், நிலைக்களனைப் படைக்கும் போதும் இருந்திருக்கிறது. அதனால்தான் அவருடைய வாசகர்கள், 'மால்குடி' என்றதுமே 'ஓ தெரியுமே!' என்று ஏதோ தங்கள் பூர்வீக கிராமம் போல் ஒன்றிப் போகிறார்கள். 'புக் டாக்' என்ற நிகழ்ச்சியில் (ஏசியா நெட்) நாராயணனின் வாழ்க்கைச் சித்திர நூல் விமர்சனம். தாம் மிகவும் நேசித்து மணந்த மனைவியை இழந்த துயரம் தாங்காமல் சில ஆண்டுகள் 'அஞ்ஞாதவாசம்' இருந்திருக்கிறார் நாராயண். அந்தக் காலகட்டத்தில் 'மீடியம்' உதவி கொண்டு மனைவியின் 'ஆவி'யுடன் உரையாடியிருக்கிறார்! இதைப் போன்ற பல அரிய தகவல்கள் கொண்ட நூலின் ஆசிரியர்கள் சூசன் ராம் – என். ராம் தம்பதி!

●● Shadowgraphy பற்றி ஏஷியாநெட்டில் ஒரு நிகழ்ச்சி. அதாவது விரல்களின் நிழல்களில் பல்வேறு உருவங்களைத் திரையில் காட்டுகிற உத்தி. அமெரிக்க அதிபரிலிருந்து நமது நரசிம்மராவ், தேவேகௌடா வரை பல்வேறு தலைவர்களையும் தமது விரல்களின் நிழல்களிலேயே உருவங்களாகச் சித்திரித்து பிரமிக்க வைத்தார் சத்யன் அச்சத் என்பவர். கணவன் – மனைவி சண்டையையும் சமாதானத்தையும் கூட அருமையாகச் சித்திரித்தார். ஆனாலும் இன்று இந்தக் கலைக்கு மக்களிடையே வரவேற்புக் குறைந்து வருவதாகக் கூறி வருத்தப்பட்டார் அவர். சொன்ன காரணம் : "டீவி. போன்ற கேளிக்கை சாதனங்கள் போட்டியாகி விட்டன!"

– 'டிஷ்'

# KALKI SHOPPING PAGE




"எனக்கு வோட்டுப் போட்டுப் பதவி யிலமர்த்தினதுக்கு ரொம்ப நன்றி. ஆனா இனிமே என் அரசியல் சங்கதிகளை நானே கவனிச்சுக்குவேன். நீங்க தலையிடக் கூடாது."

# ஆஹ்ஹாஹ்ஹா!...

'பணத்தை எப்படி ஒளிச்சு வைக்கறது? சி.பி.ஐ.யைக் குழப்புவது எப்படி? நீதி மன்றங்களுக்குக் கடுக்காய் கொடுத்து விசாரணைகளிலிருந்து தப்புவது எப் படி'ன்னு நம்ம கட்சித் தலைமை மட்டும் கொஞ்சம் முன்னெச்சரிக்கையோட சுற் றறிக்கை அனுப்பியிருந்தா, இவ்வளவு பேர் லஞ்ச ஊழல் வழக்குல மாட்டிக்கிட்டிருக்க மாட்டாங்க...






"வி.வி.ஐ.பி.க்கள் ஆஜராகற வழக்கு களுக்குன்னே தனியா ஒரு ஸ்டேடியம் கட்ட வேண்டியிருக்கும் போலயிருக்கு..."




"இந்த ஐ.ஏ.எஸ் செயலரை மாத்திட்டு யாராவது சாதாரண கிளார்க்கை அனுப்புங்க. நான் என்ன ஆணை பிறப்பிச்சாலும் கேலியா சிரிக்கறாரு..."

— இந்தியன் ஃபீச்சர்ஸ் சிண்டிகேட்

# என் வீட்டிலும் பூனைக்குட்டி...



அசம்பாவிதங்கள் ஏதுமின்றி விடிந்து கொண்டிருந்த நிம்மதியில் அப்போதுதான் தூங்கத் தொடங்கியிருந்த ஆரையம்பதியின் நெஞ்சைத் துளைத்துக் கொண்டு திடீரென்று எழுந்தது அந்தக் கூக்குரல்.

படுத்த பாயை சுருட்டி வைக்கவில்லை; தேனீர் குடிக்கவில்லை; முகம் கூட கழுவ வில்லை. கூக்குரல் எழுந்த வீட்டில் அயல் திமுதிமுவென்று குழுமி விட்டது.

"என்ன?"

"ஆள் முடிஞ்சு போச்சு!"

"என்ன நடந்தது?"

"அருமை செத்துப் போச்சு!"

"எப்பிடி?"

"................"

"எப்பிடியாம்?"

"......................"

விசாரணைகளின் பின் தெளிவில்லாத ஒரு மௌனம் திடீரென அங்கே விழுந்தது.

மேற்கொண்டு கூக்குரல் இல்லை; 'என்ன'கள் இல்லை; 'எப்படி'கள் இல்லை.

ஒரு கனத்த இரவுக்குப் பின் வரும் விடியலில் இழவுச் செய்தியொன்று சூறாவளி போலத்தான். அந்த அதிகாலையிலேயே அருமைநாயகம் இறந்து போய் விட்ட செய்தி கிராமம் முழுக்கப் பரவத் தொடங்கி விட்டது.

அருமைநாயகத்தின் மரணச் செய்தி காதில் விழுந்ததும் கைவேலையைப் போட்டுவிட்டு உடனடியாகவே ஓட வேண்டும்போல் இருந்தது பராசக்திக்கு.

ஆனால், முடிகிற காரியமா?

பிள்ளைகள்... ஆடு மாடு... சமையல்... அத்தோடு அப்பாவுக்குச் செய்ய வேண்டிய கடமைகள்!

மகன் வீட்



டில் மனஸ்தாபப்பட்டுக் கொண்டு ஒருநாள் அவராகவே மகள் வீடு வந்து விட்டார். வந்து ஒருவாரம் ஆகிறது. வரும்போதே உடம்பு மிகவும் பலஹீனம். காய்ச்சல் வேறு விட்டுவிட்டுக் காய்ந்து கொண்டிருந்தது. தனிக் கவனமெடுத்த பராமரிப்பு தேவையாக இருந்தது அவருக்கு.

கணவன், வீட்டில் நின்றிருந்தாலாவது பரவாயில்லை. ஓடிப்போய் அழுது துக்கத்தைக் கொட்டிவிட்டு ஓடி வந்திருப்பாள். ஆனால், அரைமணி நேரத்துக்கு முன்புதான் சைக்கிளை எடுத்துக் கொண்டு வேலைக்குப் புறப்பட்டுப் போயிருந்தான், அவன்.

இனி அவன் திரும்பி வர மாலை ஏழு மணி ஆகும்.

அதுவரை அங்கிங்கு நகர முடியாது அவளால்.

ஆனால், போயும் ஆக வேண்டும். அது அருமை நாயகத்தின் மீதுள்ள அபிமானத்தால் மட்டுமல்ல, அவனது அக்கா சாரதாவோடு அவளுக்கு அத்யந்த சிநேகிதம் இருந்ததாலும் ஆகும். மனத்துக்குள்ளாய் அழுது கொண்டே சாப்பாடு கொடுக்கிறவருக்கு சாப்பாடு கொடுத்து, மருந்து கொடுக்கிறவருக்கு மருந்து கொடுத்து ஒருவாறு வீட்டுக் காரியங்களை ஒதுங்க வைத்துவிட்டு, அவசர அவசரமாக அவள் சாவுவீட்டுக்கு வந்த போது, தெருவரையில் ஊர் கூடியிருந்தது.

அவள் வாசலைக் கடந்து போய் முற்றத்தில் கூடியிருந்த பெண்கள் பகுதியிலே அமர்ந்தாள்..

விறாந்தையில் நீட்டிக் கிடத்தப்பட்டிருந்த அருமை நாயகத்தின் உடல், தலை மாட்டு குத்துவிளக்கு, கால் மாட்டு தண்ணீர்ச் செம்பு தான் அந்த வீட்டில் ஒரு மரணம் சம்பவித்திருக்கிறது என்பதைச் சொல்லிக் கொண்டிருந்த அம்சங்கள்.

மற்றபடி அழுகையில்லை, ஓலமில்லை, ஒப்பாரியில்லை. முதல்நாள் ஆமி - துப்பாக்கிச் சூடு என்றோ,

தேவகாந்தன்

ஊர்க்காவற்படை - வெட்டுக்குத்து என்றோ எதுவுமில்லை.

'அப்ப.. அருமை எப்படிச் செத்தது?'' அவளுள் கேள்வி இரும்புக் கொக்கியாய் இழுத்தது.

'நரகசபை நூல் நிலையத்தில் வேலை செய்யிற அருமை செத்துப் போச்சுதாம், அக்கா!' என்று எதிர்வீட்டு ராஜன் சொன்ன போதே, எப்படி என்றொரு கேள்வியை அவள் கேட்டு வைத்திருக்கலாம். ஆனால், கேட்க வில்லை. கேட்கிற நினைப்பு வரவில்லை. இறப் புச் செய்தியினாலான துடிப்பு அதை மறக் கடித்திருந்தது. அது மட்டுமல்ல, எப்படியென்ற கேள்வியில் இப்போதெல்லாம் பெரிதான அர்த்த எதிர்பார்ப்பும் இருப்பதில்லை.

மரணமானது காரண காரிய விசாரித் தலுக்கு அப்பாற்பட்டதாய் பொதுமையடைந்து விட்ட சோகத்தை எண்ண அவள் மனம் வலித்தது.

அருமையின் மரணத்தினது காரணம் பற்றிய கேள்வி, அங்கே வந்து சேர்கிறவரையில் அவளிடத்தில் தோன்றவில்லை. ஆனால், அப்போது தோன்றியது.

பக்கத்தில் யாரிடமாவது கேட்கலாமென் றால் பதில் சொல்லக்கூடிய கூட்டத்தில் யாரும் இல்லை போல் தெரிந்தது.

மேலும், மரணம் சம்பவித்து மூன்று நான்கு மணி நேரத்தின் பின் அப்படியொரு கேள்வி இழவு வீட்டில் அநாகரிகம். அத்துடன், அந்தக் கேள்வி தன்னை அந்தக் கூட்டத்தில் ஒட்டுறவு இல்லாதவளாய் அந்நியப்படுத்திக் காட்டி விடும் என்பதையும் யோசித்து அவள் தன்னை அடக்கிக் கொண்டாள்.

ஒரு மரணத்தின் திகைப்பு மட்டும் சூழ இருந்தது.

எல்லோரும் விசும்பி விடுகிற அல்லது ஓவென்று கதறிவிடுகிற நிலைமையில்தான் இருந்தார்கள்.

ஒடுங்கிய விறாந்தையின் நீள்பக்க மூனைகளில் குடும்பத்தாரும், அக்கம்பக்கத்து வீட்டுப் பெண்களும் அடைந்திருந்தனர். படிக் கட்டிலே சிலர். மீதிப் பேர் நெருக்கியடித்துக் கொண்டு முற்றத்தில்.

முற்றத்தில் இருந்த பராசக்தியின் பார்வைச் சமாந்தரத்தில் கிடத்தப்பட்டிருந்தது அருமை நாயகத்தின் உடல்.

பழுத்த மரமில்லை, பட்ட கிழமில்லை, ஆனாலும் வந்து விட்டிருந்தது மரணம்.

இப்போதெல்லாம் பிராயம் பார்க்காமல் மரணம் வருவது அவர்களுக்கும் பழக்கமாகி விட்டிருக்கிறதுதான். கண்ணி வெடியில் வரும்; குண்டுப் பார்சலில் வரும்; ஊர்க்காவல் படையின் வெறித்தனத்தில் வரும். இவை யெல்லாம் பிராயம் பார்ப்பதில்லை. பச்சைக் குழந்தை என்று கூடப் பார்க்காது.

ஆனால், காயம் படாமல், ஒரு சொட்டு ரத்தம் சிந்தாமல் அல்லவா இந்த இளைஞன் செத்துப் போயிருக்கிறான்!

எப்படி இது சாத்தியம்?

மாரடைப்பு வருகிற வாகுவான உடம்பு கூட இல்லையே!

முதல் நாள் இரவு ஏழு மணியளவில் சந்திக் கடையில் நின்று அருமைநாயகம் யாருடனோ பேசிக் கொண்டிருந்ததைப் பார்த் ததாகக் கூறி உடம்பு வெலவெலத்தாள் முன்னாலிருந்த ராஜம்மா.

'அக்காவெண்டு அவன் ஒருக்காச் சொன் னால், இன்னுமொருக்காச் சொல்ல மாட் டானா எண்டு இருக்கும்' என ஒருத்தி சொல்ல, 'எங்களோட கூடப் பிறந்ததுகளும் இருக்குது தான், ஆனால் அருமை அக்காவெண்டு சொன் னால் பாசம் பொசியும்' என்றாள் யாரோ ஒருத்தி. 'நடந்தாப் புல்லுக்கூடச் சாகாது. அதுக் குப் போய் இப்பிடி ஒரு சாவு வந்துதே!' என்றாள் பின்னாலிருந்த பாக்கியம்.

அப்படியானவனின் மரணத்தில் அவளது இதயமும் அழுதுகொண்டுதான் இருந்தது. ஆனாலும், அதையும் மீறி எழுந்து கொண்டி ருந்தது அந்தக் கேள்வியின் நச்சரிப்பு. 'அருமை எப்பிடிச் செத்தது?'

பேச்சுத் தொனிகள் இப்போது சற்று அதிகமாகியிருந்தன. இனி மரண காரணம் தன்பாட்டில் வெளிவந்துவிடும் என்று நம்பிக் கையோடு காத்திருந்தாள் அவள்.

சடலத்தின் கால்மாட்டுப் பக்கமாய் இருந்த அறையிலிருந்து ஒரு பூனை மெல்லத் தலையை நீட்டி வெளியே எட்டிப் பார்த்துவிட்டு சடா ரென உள்ளே இழுத்துக் கொண்டது, அவள் பார்வையில் பட்டது.

இந்த மாதிரிதான் அவள் வீட்டுப் பூனை யும்.

இது மஞ்சளும் வெள்ளையும். அது கறுப்பும் வெள்ளையும்.

நிறம் வேறானாலும் உருவம், முகம், பார்வை, எச்சரிக்கைத்தனம் எல்லாம் ஒரே மாதிரியே இருந்தன.

அப்படி அது இருக்கும்தான்.

புளியடி வீட்டில் பூனை குட்டி போட் டிருந்த போது இவளும் சாரதாவுமாகப் போய்ப் பார்த்து அழகானதாக எடுத்து வந்த ஒரே தாயின், ஒரே ஈற்றுக் குட்டிகள் அவை. பார்வை, பாவனைகள் ஒன்றாக இருப்பதில் ஆச்சரியமில்லை.

இவள் வீட்டுப் பூனையிடம் எல்லோருக் கும் ஆசை. குழந்தைகளுக்கு மட்டுமல்ல, அவள் கணவர் ராஜரத்தினத்துக்கும் கூட அது செல்லம். இவளுக்கோ கொள்ளைச் செல்லம்.

வளவுக்குள் இவள் செல்கிற இடமெல்லாம் அதுவும் 'மியாவ்... மியாவ்...' என்று கத்தியபடி பின்னால் அலைந்து கொண்டிருக்கும். அதற்கும் இவள் மீது அதிகப் பிடிப்போ? படுப்பதும் இவள் தலைமாட்டோடுதான். அதற்கு மணி என்று பெயர் வைத்திருந்தாள் இவள்.




மயத்துக்குள் மையத்தை எடுத்து விடுவதே உரித்தாளிகள், உறவினரின் எண்ணமும் என்பது அவர்களது பேச்சில் தெரிந்தது.

திகைப்பிலும் சோகத்திலுமிருந்து சுதாரித்தவர்கள் காரியங்களைக் கவனிக்கத் தயாராகினர்.

தமது சொந்த இழப்புக்களின் ஞாபகத்திலும், கடந்த இரண்டு இரவுகளிலும் எழுந்த அச்ச அலைகளின் எண்ண மீட்புகளிலுமென்று ஒவ்வொருவரும் ஒவ்வொரு எல்லையில். எனினும், ஆழ்ச்சித் தீவிரம் பெரும்பாலும் ஒன்றாகவே இருந்தது.

அந்த இரண்டு இரவுகளும் அவர்களால் மறக்கப்பட முடியாதவை.

முந்தாநாள் காலையில் போராளிகள் வைத்த கண்ணிவெடியில் சிதறிப் போன ராணுவ வண்டியில் ஒரு அதிகாரி உட்பட மூன்று ராணுவத்தினர் இறந்து போனதாகத் தகவல் கிடைத்ததிலிருந்து அவர்களைப் பீடித்து விடுகின்றன பிராண பயமும், மான அச்சமும்.

அந்த நிமிஷத்திலிருந்து ஒரு மரணத்தையல்ல, பல மரணங்களையும், பல அழிவுகளையும், பல அவமானங்களையும் எதிர்பார்த்திருந்த ஊர் அது. சொல்லப் போனால் அந்த ஒரு மரணத்தோடு ஒரு திருப்தியை அது அடைந்திருக்க வேண்டும், அது அதுகாரணமாக ஏற்படாதிருந்தபோதிலும்.

ஆனால், அதுவோ பாரிய இழப்பை அடைந்த சோகத்தைக் கொண்டிருந்தது.

அது அருமைக்காக மட்டுமின்றி, அருமை செத்த விதத்துக்கான துக்கமுமோ?

அரசாங்கத்துக்கும் விடுதலைப் புலிகள் இயக்கத்துக்குமிடையில் இருந்த கடந்த மூன்று மாத சமாதானப் பேச்சு வார்த்தைக்கான யுத்த நிறுத்த காலத்தைக் கொண்டாடாத மனிதரே இல்லை. இன்னும், நிரந்தர சமாதானம் ஏற்பட்டு விடுமென்று அந்தச் சூழ்நிலைமையின் தோற்றத்தைக் கொண்டு அனுமானித்து மகிழ்ச்சியடைந்தவர்களும் பல பேர்.

ஆனால், எப்படியோ அந்த நிலைமை மாறிவிட்டது திடீரென்று. யுத்த மேகம் தீவின் வடக்கு, கிழக்குப் பகுதிகளில் கவிந்து விட்டது.

ராணுவ வண்டிகளின் ஓட்டம், போராளிகளின் நடமாட்டம், போலீஸ் ரோந்துகள் கிழக்கிலங்கையில் ஒன்றுக்குப் பத்தாய்ப் பெருகிவிட்டன மறுபடியும்.

மக்கள் முகங்களிலும், மனங்களிலும் பழையபடி இருட்டு.

அதை பலபடப் பெருக்குவது போல் ஊர் நடுவே – பிரதான வீதியில் – கண்ணிவெடி வெடித்திருக்கிறது; அரசபடைத் தரப்பில் நான்கு பேர் செத்திருக்கிறார்கள்.

அதுபோன்ற சம்பவங்களின் பின்விளைவாக முடுக்கி விடப்படும் வன்முறைகளை கண்டு, கேட்டிருந்த மக்களுக்கு அந்த இரண்டு இரவுகளிலும் தூக்கமே பிடிக்கவில்லை. அசம்பாவிதம் ஏதாவது ஏற்பட்டால் குழந்தை குட்டிகளை இழுத்துக் கொண்டு எங்காவது ஓடித் தப்புவதற்கான தயார் நிலையில் எல்லோரும்.

ஆனால், அதிசயம் நடந்தது போல் எந்தவிதமான துர்சம்பவமும் நிகழவில்லை.

முந்திய விடியல் போல் அன்றைய விடியலும் சிறிது நிம்மதியைக் கொண்டு வந்தது தான். ஆனாலும், வந்த அருமையின் மரணச் செய்தி எல்லா நிம்மதியையுமே அடித்துக் கொண்டு போய்விட்டது.

'அருமை எப்படிச் செத்தது? நேற்றுத்தான் எந்த அசம்பாவிதமும் நடக்கல்லையே!' பராசக்தியின் மனத்தில் மீண்டும் அதே கேள்வி'.

அது வெறுமனே ஆவல் அல்ல. ஒருவருக்கு நேர்ந்த மரணத்தின் நியாய அநியாயத்தைக் கணிப்பதற்கு எந்த ஒருவரிடத்திலும் தோன்றக் கூடிய மிக இயல்பான விழைவும்தான்.

ஆனாலும், பராசக்திக்கு பதில் கிடைக்கவில்லை.

தற்செயலாக அவளின் பார்வை மறுபடி

யும் அறை வாசல் பக்கமாகப் படர்ந்தது.

அங்கே... மீண்டும் அந்த வெள்ளை வரி மஞ்சள் பூனை!

மெல்ல எட்டிப் பார்ப்பதும், முன்னே இரண்டு அடிகள் எடுத்து வைப்பதும், பின் பதுங்கிப் பின்வாங்குவதும், மறுபடி முன்னேறுவதுமாய்...

'நான் மீன் வெட்டுற நேரத்தில மணியும் இப்பிடித்தான் பதுங்கிப் பதுங்கி வரும்.' அவள் நினைத்துக் கொண்டாள்.

அந்தப் பூனையின் முகத்தில்.. பார்வையில்... ஏதோ ஒரு இயல்பின்மையை அவளால் உணர முடிந்தது.

அது ஆட்கள் கூடியிருப்பதால் ஏற்பட்ட கலவரம் அல்ல, வேறு ஒன்று. ஒரு மரணத்தை அறிந்த ஏக்கத்தை விடவும் ஆழமான ஒன்று.

பூனை மெல்ல மெல்ல முன்னேறி அருமையைப் பார்த்தபடி சிறிது நேரம் நின்றது.

பூனையை அங்கே கண்ட சாரதா சீறியெழுந்தாள்.

கையில் அவசரத்துக்கு எதுவும் அகப்படாத அந்தரத்தில் சிறிது தவித்து, பின் மூலையில் சாத்திக் கிடந்த தும்புத்தடி பார்வையில் பட ஓடிப் போய் எடுத்து, அதைக் காலின் கீழே போட்டு உந்தி உந்தி இழுத்து முறித்தாள்.

சடாரென்று தடி முறிந்த சத்தத்தில், ஏற்கெனவே அவள் எழுந்த அவசரத்தைக் கண்டு உஷாராகி பின்வாங்கத் தொடங்கியிருந்த பூனை, அறைக்குள் பாய்ந்தோடி மறைந்தது.

வாய்க்குள் எதையோ புறுபுறுத்தபடி தடியைப் பக்கத்தே வைத்துக் கொண்டு பழையபடி வந்தமர்ந்தாள் சாரதா.

பூனை மீது தான் காட்டிய ஆத்திரத்தில், அதை அடிக்க தடி முறிப்பதற்குச் செலுத்திய மூர்த்தண்யத்தில் இம்மி பிரக்ஞை இல்லை அவளிடத்தில்.




அந்த அழகிய முகமும், அளவான வெளிர் செம்மை இதழ்களும் என்னமாதிரி கோணல் பட்டு விகாரமடைந்தன!

பராசக்தி அதிசயித்தாள்.

அதிசயம், சாரதா பூனை மீது காட்டிய கோபத்திலும்தான்.

இப்போது மெல்ல யாரோ அழுதார்கள். யாரோவின் மெல்லிய ஒப்பாரியும் நாலு வரி கேட்டது.

நிமிர்ந்த பராசக்தியின் பார்வையில் மறுபடி பூனை!

இப்போது வாசலில் நின்று அவளையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தது. அவள் மட்டும் தன்னைக் கவனித்துக் கொண்டிருக்கிற மன உளைச்சலோ?

பின் பதுங்கிப் பதுங்கி அருமையின் காலடி வரை சென்றது.

அசலனத்தில் சிறிது நேரம் உறைந்திருந்து விட்டு மெல்ல 'மியாவ்!' என்றது.

'பூனை அழுகிறதா? ஓ... அருமையின் இறப்பை பூனையால் கூட தெரிந்து கொள்ள முடிந்திருக்கிறதே!' என்று ஒருவகைத் துக்க அதிசயம் அடைந்தாள் பராசக்தி.

மனிதர்கள் நாய் வளர்க்கிறார்கள், பூனை வளர்க்கிறார்கள், கிளி வளர்க்கிறார்கள். இவையெல்லாம் ஆடு, மாடு, கோழி வளர்ப்பது போன்று பயன் மட்டும் கருதியல்ல என்பது அவளுக்குத் தெரியும். அதற்கு மனிதர்களிடத்தில் இன்னும் மீதமிருக்கும் வாழ்வின் மென்னுணர்வுதான் காரணம் என்பதையும் அவள் அறிவாள்.

இப்போது கூட சாரதா விரட்ட விரட்டவும், அடிக்கத் துரத்தவும் அகலாது அங்கேயே சுழன்று கொண்டிருக்கிறதே அவர்கள் வீட்டுப் பூனை!

பூனையின் 'மியாவ்' சத்தம் நினைவுகளில் அமுங்கியிருந்த சாரதாவின் கவனத்தை மின்னலாய் ஈர்த்தது.

மெல்ல அருகே வைத்திருந்த தடியை எடுத்து, குறி தவறி யார் மீதும் பட்டுவிடுமோ என்று கூட யோசிக்காமல் பூனையை நோக்கி வீசினாள்.

குறி தவறவில்லை.

பூனை எகிறி விழுந்தது.

பின் கத்திக் கொண்டு அப்படியே பாய்ந்து வெளியே ஓடியது.

'ம்..... விடு. இனி அதை அடிச்சு என்ன செய்யிறது, சாக்கொல்லித்தான் என்ன செய்யிறது?' யாரோ சொன்னது கேட்டது விறாந்தைப் பக்கமிருந்து.

பராசக்தியால் மேலும் பொறுக்க முடிய

வில்லை. "ஏன் சாரதா இப்பிடிப் போட்டு அந்தப் பூனையை அடிக்கிறா? பூனைப் பாவம் பொல்லாத பாவமென்பினம்" என்று தணிந்த குரலில் கூறினாள் பக்கத்திலிருந்த பெண்ணிடம்.

"சாரதா பரவாயில்லை. நானாயிருந்தால் இத்தனைக்குள்ள அதை அடிச்சுச் சாக்கொல்லி இருப்பன். அது பாய்ஞ்சதாலதானே ,ருமை சாகவேண்டி வந்தது!" என்றாள் அந்தப் பெண்.

"என்ன, இது பாய்ஞ்சதாலயோ?"

"பின்னே? ஏன் உனக்கு விஷயமே தெரியாதோ? எலியோ, கிலியோ பிடிக்கிறதுக்குப் போல வளையில பாய்ஞ்சிருக்கு. தவறி, நித்திரையாய்க் கிடந்த அருமைக்கு மேலேயே விழுந்திட்டுது. 'ஐயோ... ஐயோ... ஆமி...' என்ட சத்தம் மட்டும் கேட்டுதாம். காலமைதானாம் தெரியும், அந்தச் சத்தத்தோடயே அருமை போயிட்டு தெண்டு. அதுக்கு வந்த சாவைப் பாத்தியே!"

"அட, கடவுளே!"

பராசக்தி பேச்சடங்கினாள். ஆனால், இன்னும் அதை நம்புவது கடினமாக இருந்தது. பூனை பாய்ந்து கூட மரணம் சம்பவிக்குமா?

சம்பவிக்கும். இங்கே சம்பவித்திருக்கிறதே! நேற்றையதும் முந்தாநாளையதும் அசாதாரணச் சூழ்நிலையில் எதுவும் சம்பவிக்கும்தான்!

திடீரென தன் வீட்டு கறுப்பு வரி வெள்ளைப் பூனை அவளுக்கு ஞாபகமாகியது.

இந்தப் பூனை போன்றே உருவம் –

இந்தப் பூனை போன்றே முகம் –

இந்தப் பூனை போன்றே பார்வை –

இந்தப் பூனை போன்றே எச்சரிக்கைத் தனம் –

இந்தப் பூனை போன்றே அதுவும் வேட்டைப் பூனை!

அவளுக்கு அடிமனத்தில் கலக்கல் எடுத்தது. 'அவர்கூட விறாந்தையிலதான் படுக்கிறவர். நெஞ்சு வருத்தம் வேற இருக்கு. அதோட ஐயாவும்... கடவுளே!'

மதியமளவில் மையம் எடுக்கப்பட்டதும் அவசர அவசரமாக வீடு வந்தாள்.

அவசரம் எதனாலும் அல்ல, மன அவசரத்தின் விளைச்சலாக மட்டுமே!

தோய்ந்து, உடை மாற்றிக் கொண்டு வீட்டு வேலைகளைக் கவனிக்கத் தொடங்கினாள்.

நீண்ட நேரமாக அவள் வீட்டில் இல்லாததால்போலும், அவளைக் கண்டதும் ஓடிவந்த பூனை அவளது கால்களில் உடம்பை உரசி, முகத்தைத் தேய்த்து.... மனிதனுக்கும் மிருகத்துக்குமிடையே இருக்கக்கூடிய உறவின் மிக உயர்ந்த எல்லை அது.

நீண்ட கோரைப் பற்களும், விறைத்து



"லேட் ஷண்முகசுந்தரம் வீடு எதுங்க?"
"சே.. அவர் ஆபீசுக்கு ஏதோ கொஞ்சம் லேட்டா வர்றார்ங்கறதுக்காக இப்படியாங்க கேக்கிறது?"
–புளியரை கணேசன்

நிற்கும் பக்கமீசை மயிர்களும், பழுப்பு நிறக் கண்களுமாய் அது உருமாற்றம் பெற்றுவிட்டது போன்ற அதிர்ச்சியுடன் அதை அதட்டி விரட்டினாள் பராசக்தி.

பூனை ஆச்சரியப்பட்டது. பின்னர் தெளிந்து கொண்டு தன் புளுகத்தைத் தொடர்ந்தும் வெளிப்படுத்தியது.

காலினால் எற்றினாள் பராசக்தி. தூரப் போய் விழுந்த பூனை 'இந்த முரட்டுத்தனமான விளையாட்டை என்னால் தாங்க முடியாது' என்பது போல அப்பால் மெல்ல நகர்ந்தது.

அன்றிரவு கணவன் சாப்பிட்டு முடிந்து படுக்கை போடுகிற நேரத்தில் பராசக்தி கேட்டாள். "நாளைக்கும் அங்கேதான் வேலையா?"

"ஆம்! ஏன்?"

"காலமை போகேக்குள்ள இந்தப் பூனையையும் கொண்டு போய் அந்தப் பக்கமாய் எங்கயாவது விட்டு விடுங்கோ."

கணவனுக்கு ஆச்சரியம். "ஏன், என்ன செய்தது அது?"

"இதுவரைக்கும் ஒண்டும் செய்யேல்லை. இனிமேல் செய்தாலும் செய்யும்."

"பாவமெல்லே, பரா! இவ்வளவு நாளாய் வளர்த்திட்டு இப்ப கொண்டு போய் எங்கயாச்சும் விடுகிறதெண்டால்..."

அவள் அவரைப் பார்க்காமலே சொன்னாள் : "பாவமுமில்லை, ஒண்டுமில்லை. ஆசைக்கு நாய், பூனை வளர்த்த காலமெல்லாம் போயிட்டுது. அந்தக் காலம் திரும்ப வரட்டும், அப்ப பாக்கலாம்."

சிறிது நேரத்தின் பின் அவனது பதில் துக்கமாக வந்தது. "சரி!"

## ஊழல் வழக்குகளில் சம்பந்தப்பட்டவர்கள் ஒன்றாகச் சந்திக்கக்கூடிய வாய்ப்புக் கிடைத்தால்...

**நரசிம்மராவ்** : அப்பாடா! நிம்மதியாப் போச்சு. கோர்ட் வாசல்படி மிதிக்கும்படி ஆயிடக் கூடாதேன்னு வேண்டிக்கிட்டிருந்தேன். பெரிய பெரிய இன்டர்நேஷனல் கான்ஃபரன்ஸ் நடக்கற 'விக்யான் பவன்'லதான் என்னை விசாரிச்சாங்க. தப்பிச்சேன். தேவேகௌடாவுக்கு என் மேல இன்னும் கருணை இருக்கு.

**ஜெயலலிதா** : உங்களுக்கு நான் தாங்க்ஸ் சொல்லணும். எம் மேல இருக்கற வழக்குகள் விசாரணையையும் இந்த மாதிரி ஒரு இன்டர் நேஷனல் சென்டர்லதான் வைக்கணும்னு கேட்டுக்கப் போறேன். தாஜ்மகால்ல வச்சுக்கலா மேன்னு தோணறது.

**ராவ்** : எனக்கு ஒரே ஒரு சந்தேகம். தீர்ப்பு நமக்குப் பாதகமா போயிட்டா, செக்யூரிடி ஆளுங்களும் நம்ம கூடவே இருந்து கம்பி எண்ணுவாங்களா? நம்ம மாதிரி அவங்க ஒண்ணும் பண்ணலியே?

**ஜெ** : சுப்பிரமணிய சாமிக்குத்தான் இது மாதிரி விஷயமெல்லாம் விவரமாத் தெரியும். அவரைத்தான் கேட்கணும்... என்னோட விசாரணையைத் தாஜ்மகால்ல வச்சுக்கலாமான்னு கேட்டதுக்கு ஒண்ணுமே சொல்லலியே நீங்க?

**ராவ்** : தேவேகௌடா மனசு வைச்சா நடக்கும். அதனால நீங்க சமயம் கிடைக்கற போதெல்லாம் தேவேகௌடாவைப் புகழ்ந்துக்கிட்டே இருங்க.

**ஜெ** : நான்தான் அன்னிக்கே ஆரம்பிச்சிட்டேனே? எனக்கு ஒண்ணே ஒண்ணுதான் புரியலே. நீங்க லக்குபாய் பாடக்கிட்ட என்னன்னு சொல்லி ஒரு லட்சம் டாலர் வாங்கினீங்க?

**ராவ்** : ஐயோ, நான் எங்க வாங்கினேன்? சந்திராசாமி வாங்கிட்டு, என்னையும் மாட்டி விட்டுட்டார்.

**ஜெ** : ஆனாலும் நீங்க சுத்த அசடு. எனக்கும்தான் ஒண்ணா, ரெண்டா, மூணு லட்சம் டாலர் வந்துது. யார்கிட்ட இருந்து வந்துதுன்னு சொன்னேனா? ஜாலியா வாங்கி பாங்குல போட்டுட்டேன். எவன் கேட்கிறது?

**ராவ்** : நானும்தான் எங்க சொன்னேன்? அந்த லக்குபாய்தானே 'நான் ஒரு லட்சம் டாலர் கொடுத்தேன். இவரும் கூட இருந்தார்'னு மெனக்கெட்டு இங்க வந்து கம்ப்ளெயின்ட் கொடுத்துட்டார். ஊறுகாய் போடறவன்லாம் எதுக்கு நியூஸ்பிரின்ட் பாக்டரி ஆரம்பிக்க ஆசைப்படணும்? சுப்பிரமணிய சாமியாவது கொஞ்சம் முன்கூட்டியே இந்த மாதிரி நடக்கப் போறதுன்னு எச்சரிக்கை பண்ணியிருக்கலாம். அவரும் பண்ணலே. என் போதாத காலம், நல்லா மாட்டிக்கிட்டேன்.

**ஜெ** : இப்பவும் ஒண்ணும் மோசமாயிடலே. பிரிட்டன் பிரதமர் ஜான் மேஜர்கிட்ட சொல்லி, லக்குபாயை ஏதாவது கேஸ்ல மாட்டிவிடச் சொல்லிடுங்க. இல்லேன்னா, மூப்பனார்தான் உங்களை மாட்டிவிட, அன்னிக்கே லக்குபாய் கேசை செட்அப் பண்ணினார்னு பேசாம பழியை அவர் மேல போட்டுருங்க. கேசும் திசை திரும்பிடும். தமாகாவும் முழிப்பாங்க. சுவாரசியமா இருக்கும்.

**ராவ்** : ஐயோ, மூப்பனார் தேவேகௌடா ஆளு. ஒண்ணு கெடக்க ஒண்ணு சொல்லி, நம்ம பாடு திண்டாட்டமாயிடும்.

**ஜெ** : சரி, சிதம்பரத்து மேல சந்தேகம்னு டுங்க! அந்த மனுஷனோட தொல்லைதான் தாங்க முடியலே. ஒரு சி.எம். சில கோடி ரூபாய் சம்பாதிக்கறதும், முன்னூறு நானூறு பிராப்பர்டி வாங்கறதும் உலகத்திலே எங்கயுமே நடக்காத மாதிரியும், ஏதோ பெரிய க்ரைம் மாதிரியும் இல்லே பேசறார்! நானும் சசியும் என்ன, தமிழ்நாடு பூராவையுமேவா வாங்கிட்டோம்?

**சுக்ராம்** : (வந்து கொண்டே) அப்பாடா, மூச்சு வாங்குது... ஹார்ட் ஆபரேஷன் செய்தும்

# இவர்கள்

மூச்சு வாங்குது.

**ஜெ** : ஏங்க, அந்த மூணரைக் கோடி ரூபாயை எப்படிங்க வீட்டுல சர்வ சாதாரணமா உட்டுட்டு லண்டன், அமெரிக்கான்னு போனீங்க? பினாமி ஒருத்தர் கூடவா கிடைக்கலே? அட்லீஸ்ட் ராவ்ஜிகிட்டயாவது கொடுத்துட்டுப் போயிருக்கலாம் இல்லே?

**ராவ்** : ஐயோ, நீங்க என்னை டைரக்டாவே மாட்டிவிடப் பார்க்கறீங்கன்னு தோணுது.

**சுக்ராம்** : யாரையும் மாட்டி விட வேண்டாம்னுதானே எனக்குத் தெரியாம, யாரோ என் வீட்டுல வச்சுட்டுப் போயிட்டாங்கன்னு சொன்னேன்?

**ராவ்** : முதல்லே காங்கிரஸ் கட்சிப் பணம்னு சொல்லலே? சீதாராம் கேசரி ஆடிப் போயிட்டார்.

**சுக்ராம்** : அட, அப்பவாவது என்னை காங்கிரஸ் கட்சித் தலைவர் பதவியிலே நியமிச்சிருக்கலாம் இல்லே? தேவேகௌடாவும் தினம் சாயந்தரம் என்னை வந்து பார்த்துட்டுப் போவார். ஜோகிந்தர் சிங்குக்கும் எங்கிட்ட கொஞ்சம் பயம்



# சந்திச்சால்..

இருக்கும். நானும் ஒரு மாதிரி சமாளிச்சிருப்பேன்.

**ராவ் :** மேடம், உங்க கட்சி ஆளுங்க இப்ப யார் யார் ஜெயில்ல, யார் யார் பெயில்ல, எத்தனை பேர் நெஞ்சுவலின்னு ஆஸ்பத்திரில, எத்தனை பேர் மாட்டிக்காம - இருக்காங்கன்னு ஏதானா அக்கவுண்ட் வச்சிருக்கீங்களா?

**ஜெ :** அவங்களுக்கு சாமர்த்தியம் போதாதுங்க. என்னைப் பாருங்க, வெளியிலதானே இருக்கேன்?

**சுக்ராம் :** ஆமா, கருணாநிதி பேர்ல ஏதோ கேஸ் போடப் போறதாச் சொன்னீங்களே? போட்டாச்சா? அப்படீன்னா நானும் தேவே கௌடா மேல ஒண்ணு போடலாமேன்னு பார்க்கறேன்.

**ஜெ :** ஆ.. ஹங்.. அதுக்கெல்லாம் டயம் இல்லீங்க. ஏன்னா, இந்த கார்ப்பரேஷன், முனிசிபல், பஞ்சாயத்துத் தேர்தல் எல்லாம் வந்து, தொண்டர்களைச் சந்திக்க வேண்டியதாப் போச்சு.

**ராவ் :** கட்சிப் பணியிலே பிஸியா இருந்துட்டதாலேதான் இன்கம்டாக்ஸ் கூட கட்டலேன்னு சொல்லியிருக்கீங்களாம்? உங்களுக்கு நல்ல நல்ல கருப்பான எல்லாம் சட்டுச் சட்டுனு வந்து- எத்தனை தடவைதான் உதட்டைப் பிதுக்கினாலும் எனக்கு அப்படி எல்லாம் ஒண்ணும் தோணவே மாட்டேங்குது..! ஆமா, நாங்கதான் உங்க கூடப் பஞ்சாயத்துத் தேர்தல்ல கூட்டு வச்சுக்கலியே, அப்படியும் எங்க கட்சி எப்படி அட்ரசே இல்லாமப் போச்சு? குமரிஅனந்தன் பாவம் குமுறிக் குமுறி அழுது ஓட்டுக் கேட்டாராமே?

**ஜெ :** அவரைத்தான் உதவாக்கரைன்னு சொல்லிட்டேனே! மே மாசத் தேர்தல்லே வாங்கின டெபாசிட்டை வேற நான் சொல்ற நான்னா, நான் சொல்ற டயத்துல, வந்து வாங்கிக்கிடுங்கன்னு சொல்லிட்டிருக்காரு வைத்தியக்கார மனுஷன். அதெல்லாம் சினேகம், தேவி கோல்டுல டெபாசிட் பண்ணிட்டதுல, அவங்க ஒரேயடியா மோசம் பண்ணிட்டாங்கன்னு ஒரே அடியா அடிச்சிட வேண்டியதுதானே?

**சுக்ராம் :** நம்ப கேசை விட்டுட்டு எங்கயோ போறோம்னு தோணுது. கபில் சிபல் அட்ரஸ் இருந்தாக் குடுங்க. நானும் அவரையே போட்டுடலாம்னு பார்க்கறேன். வேற வழி இல்லே!

**ராவ், ஜெ :** ஐயையோ, அவரை தில்லிக்கும் மெட்ராசுக்குமா நாங்க இழுக்கற இழுவையிலே அவரே பாவம், பறந்து பறந்து திண்டாடிட்டிருக்காரு. எல்லா கேஸ்லயும் ஆஜர் ஆனா, யார் யார் எந்தக் கேஸ், எத்தனை டாலர், எத்தனை கரன்சின்னு குழம்பிடுவாரு. பாவம், அவரை உட்டுடுங்க!

கற்பனை : **சாருகேசி**


SILKS
SALES
இந்த வருடம் ஸ்பெஷல்
—
டெங்கு டிரெஸ் செட்


"டெங்கு ஜுரத்தால் உயிரி-ழந்தவர்களின் குடும்பத்துக்கு இந்த ஆட்சி என்ன பதில் சொல்லப் போகிறது என்று எதிர்க்கட்சியினர் எக்காளக்-கூச்சலிடுகிறார்கள். அவர்களுக்கு தெரியுமா? இறந்தவர்களுக்கு மலர் வளையம் வாங்க மட்டுமே அரசு இதுவரை ரூ.50,000 செலவிட்டிருக்கிறது!"


டெங்கு ஒழிப்பு மாநாடு






டெங்... டெங்...
டெங்கு
ப்ரொட்யூசர் ஏன் இப்படி தலைதெறிக்க ஓடறார்?
சின்னதா, சுருக்குனு தைக்கற மாதிரி ஒரு டைட்டில் சொல்லுங்கன்னு கேட்டதுக்கு, டைரக்டர் டெங்குன்னாராம்-

டிங்கு ஒழிப்பு | தடுப்பு மாநாடு

மண்டபத்தில கொசுத்தொல்லை தாங்கலை தாயி. இந்த டிங்கு ஃபீவர் ஓயற வரைக்கும் உங்க வீட்டுல ஒரு ரூம் ரெண்டுக்கு விடறீங்களா?

ஆகவே, மூலகாரணமான கொசுக்களை ஒழித்துவிட்டால்...

டிங்கு வளர்ப்பு மாநாடு

டிங்கு ஜுரம் என்பது நம் நாட்டுப் பாரம்பரியத்தில் கிடையவே கிடையாது இது பாகிஸ்தானின் திட்டமிட்ட சதி என்று குற்றம் சாட்டுகிறேன்!

என்னதிது சுகாதார மையத்துல யாரையும் காணும்! ஸ்ட்ரைக்கு மொத்தமா லீவா...?

எல்லாருக்கும் டிங்கு ஜுரமாம்!

# ஜாலி போட்டி - 15

## பரிசு ரூ. 5000

சில சொற்களுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட அர்த்தங்கள் உண்டு. அப்படிச் சில சொற்களுக்கான 'க்ளூ' கீழே தரப்பட்டுள்ளன. இரண்டு பொருளில் உபயோகமாகும் அந்த சொற்கள் என்னென்ன என்பதைச் சரியாகக் கண்டு பிடித்தால் பரிசு ரூ.5000. பலர் கண்டுபிடித்து விட்டால் குலுக்கலில் ஒருவர். முடிவு தேதி 18.11.96. ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

1. வாசித்துப் பார்க்கலாம்; வருடி மகிழலாம்.
2. தெற்கே இது ஒரு மாவட்டம்; தேடிச் சுற்றும் இளவட்டம்.
3. எந்நாளும் பெண்கள் கேட்கின்ற விஷயம்; சொன்னாலும் 'ராவ்' சிந்தாத விஷயம்.
4. 'சேர்பவர்' தகுதியால் அரசியலில் மதிப்பு; சமைப்பவர் திறமையால் சாப்பாட்டில் ருசிப்பு !
5. முன்பெல்லாம் கிணற்றிலிருந்தது; இப்போது இதை மனத்தில் சுமக்காத மனிதர்களே இல்லை!

**ஜாலிபோட்டி — 15**

**இரு அர்த்தம் தரும் ஒரே சொற்கள்:**

1) ................................................

2) ................................................

3) ................................................

4) ................................................

5) ................................................

பெயர்: ................................................

முகவரி: ................................................

................................................

................................................

**வா**சலில் என்னைப் பார்த்ததும் அச்வின் உச்சஸ்தாயியில் கூப்பிட்டான் :

"வரியா? சிகாகோ பல்கலைக்கழகத்துக்குப் போய் வரலாம்?"

இன்டர்நெட்டில் சிகாகோ ப. கழகம் தனக்கென ஒரு வீடு கட்டிக் கொண்டிருக்கிறது.

(http://www.lib.uchicago. edu)

"இது யூனிவர்சிட்டி லைப்ரரி.. மேயறதுக்கு ஏகமா புத்தகம் உண்டு... எல்லாம் கம்ப்யூட்டர்லே போட்டு வைக்கறாங்க. இதைப் பாரு... பத்திரிகை கூட நடத்தறாங்க... அச்சுலே வந்தா magazine கம்ப்யூட்டர்லே வர்ற பத்திரிகை E-Zine எலக்ட்ரானிக் மேகசின்..."

"தமிழ்லே கூட ஈசைன் வருதாமே..." என்றேன்.

"விஞ்ஞானியோ, அஞ்ஞானியோ... எல்லாருக்கும் சுவாரசியமா இருக்கற மாதிரி

# கம்பன் ஏமாந்தான்...

ஈசைன் வர ஈசன் அருளட்டும்..."

சிகாகோ மின் பத்திரிகையில் கணிதம், மருத்துவம், பொருளாதாரம் என்று கட்டுரை கட்டுரையாகப் புரட்டிக் கொண்டு போனான் அச்வின். அங்கங்கே படங்கள்... உபரி தகவல்களுக்கு, வேறு தகவல் வீடுகளுக்கு இணைப்புக்கள்...

சட்டென்று 'ரோஜா முத்தையா' என்ற பெயர் கண்ணில்பட, நிறுத்தச் சொல்லிக் கை காட்டினேன்.

ஆயிரக்கணக்கில் புத்தகங்களை, பத்திரிகைகளைச் சேகரித்து, அபூர்வமான ஒரு நூலகத்தையே வீட்டில் வைத்திருந்த வித்தியாசமான தமிழர் ரோஜா முத்தையா. தேடித் தேடிப் புத்தகம் வாங்கவும், அட்டவணைப் படுத்தவும், அழகாக அடுக்கி வைக்கவுமே கைக்காசையும், நேரத்தையும், இருப்பிடத்தையும் செலவாக்கிய முத்தையா, இறக்கும் தருவாயில், தாம் இப்படிச் சேர்த்த செல்வத்தைத் தகுதியானவர்களிடம் ஒப்படைக்கப் பட்ட சிரமம் கொஞ்ச நஞ்சமில்லை.



நல்லவேளை... ரோஜா முத்தையா நூலகம் இப்போது சிகாகோ பல்கலைக்கழகம் வசம் – புத்தகம் எல்லாம் இங்கேதான். நிர்வாகம் மட்டும் அங்கேயிருந்தது.

சிகாகோ பல்கலைக் கழகத் தகவல் பக்கத்தில் 'பிரம்மாண்டமான ஈடுபாடு' என்ற தலைப்பில் (Magnificient obsession) ரோஜா முத்தையா பற்றி இதெல்லாம் விரிவாக எழுதி வைத்திருக்கிறார்கள். நூலகத்தில் உள்ள புத்தகங்களில், சாம்பிளுக்கு சில மேலட்டைப் படங்கள்...

1936ல் வெளியான தமிழ்நாடு டாக்கீஸ் 'மகாபாரதம்' சினிமா பாட்டு புத்தகம்... 1895ல் வெளிவந்த 'திருவிளையாடல் புராணம்' (அப்போதே இரண்டாம் பதிப்பு!)... ஒரு புத்தகமும் விலக்கில்லை... (கையால் படம் வரைந்து வண்ணம் தீட்டிய அட்டை 'திருவிளையாடல் புராணம்' புத்தகத்துக்கு – அந்தக் கால பேஷனாம்!)

"படம் வரையறதுன்னதும் நினைவு வருது... கொஞ்சம் அனிமேஷன் பார்க்கலாம்..."

அச்வின் கம்ப்யூட்டரில் அடுத்தபடி கொடுத்த முழுநீள இன்டெர்நெட் விலாசம் : - http://ctdnet.acns.hwu.edu/cmbecber/visions/flo

"ஃப்ளோயிங் என்கிறது புது அனிமேஷன் டெக்னிக்... இங்கே அதை நாலு பேர் உபயோகிச்சு வித்தை காட்டறாங்க பார்..."

அச்வின் சொல்லிக் கொண்டிருக்க, திரையில் கதையாக விரிகிற வரிகள் – "நானும் பிரண்ட்ஸ்ும் ஜாலியா வெளியே போனோம்... கொஞ்சம் சுதி ஏத்திக்கிட்டோம்... பாருங்க... ஆளே மாறிப் போய்... இப்படி... இப்படித்தான்..."

ஒருத்தன் காலில் போட்ட ஷூ மெல்ல திராட்சைப் பழமாகிறது. இன்னொருவன் எலக்ட்ரிக் வயராகிறான். ஹைலைட்டாக ஒரு அழகான முகம் அசுத்த வஸ்துவாகிறது...

"சே! இப்படியும் ஒரு கற்பனை..." முகத்தைச் சுளித்தேன். அச்வின் அடுத்த தகவல் வீட்டுக்குத் தாவினான்.

அது 'www.air.com' என்ற ஆல் இந்தியா ரேடியோவின் தகவல் பக்கம்!

"என்ன பார்க்கறே! அரசுத் துறை கூட 'வெப்'பிலே வந்தாச்சு... படு சுறுசுறுப்பு. அப்பப்ப நியூஸ் பார்க்க, கேட்க, 'சித்ர ஹார்'லே இந்த வாரம் என்னென்ன பாட்டுன்னு தெரிய, தேசிய ஒலிபரப்பு விவரம் படிக்க... ரொம்பவே வசதி..."

"நிலைய வித்வான் வாத்திய இசை எல்லாம் கிடையாதா?"

அச்வின் முறைத்துவிட்டு, 'தமிழ்ப்பாட்டு' என்ற பகுதியைத் தேர்ந்தெடுத்தான்.

"சத்தம் கேட்க ரியல் ஆடியோ 2.0 என்கிற மென்பொருள் வேணும்... இன்டெர்நெட்டுலே தேடிப் பிடிச்சுப் போட்டு வச்சிருக்கேன்..."

அவன் சொல்லிக் கொண்டிருக்கும்போதே கம்ப்யூட்டர் எஸ்.பி.பி. குரலில் கணீரென்று பாடியது – "கம்பன் ஏமாந்தான்..."

"நிழல் நிஜமாகிறது படத்துலே, கமல் காதலி சுமித்ராவை நெனச்சுப் பாடறதுதானே?"

"நல்லவேளை ஞாபகப்படுத்தினே... கேபிள் டீ.வி.யிலே சிங்காரவேலன்... கமலுக்கு சுமித்ரா அம்மாவா நடிச்ச படம்..."

அச்வின் கம்ப்யூட்டரை ஆஃப் செய்து விட்டுக் கிளம்பினான்.

**- இரா. முருகன்**

இன்டர்நெட் கம்ப்யூட்டர் உதவி : Sap Computers, Chennai - 17.

# INDEPENDENCE DAY



உலகில் மட்டும்தான் உயிரினங்கள் உண்டா என்பதற்கு விடை ஒருவழியாகக் கிடைக்கிறது - மறக்க முடியாதபடிக்கு! வேற்று கிரகத்தைச் சேர்ந்த ஒரு விண்கலம் உலகை - முக்கியமாக அமெரிக்க நகரங்களை - அழிக்கத் தொடங்குகிறது. அதை அழிக்க சக்தி வாய்ந்த அணு ஆயுதங்களை அமெரிக்கா அனுப்ப, அவை விண்கலத்தை எந்தவிதத்திலும் அழிக்க முடியவில்லை. மாறாக அணுக்கதிர்களால் முக்கிய நகரங்களுக்கு மேலும் பாதிப்பு. உலகமே ஒன்று திரண்டு ஓர் அணியாகத் தாக்க, விண்கலம் அழிகிறது!

அழிவுப் படங்கள் (disaster movies) சயன்ஸ் ஃபிக்ஷன், யுத்தப் படங்கள் (war movies) இவற்றிற்கெல்லாம் பொதுவாக ரசிகர்கள் ஆதரவு என்றுமே உண்டு. மூன்று பிரிவுகளும் கலக்கப்பட்ட சரியான மசாலா 'இன்டிபென்டென்ஸ் டே'. இதனால்தான் அது அமெரிக்க பாக்ஸ்-ஆபீஸில் புதுச் சரித்திரங்களை உண்டாக்கிக் கொண்டிருக்கிறது.

'உலகமே திரண்டு' என்று குறிப்படப்பட்டாலும் அமெரிக்கா, இராக் (ஆம், படத்தில் இரண்டும் ஒரே கட்சி), பிரான்ஸ், ரஷ்யா ஆகியவை மட்டுமே 'திரள்கின்றன' "உலகின் தென்பாதி - பாது காப்பாக இருக்கிறது" என்ற ஒரே வரியைக் கம்ப்யூட்டரில் ஓடவிட்டுக் காட்டி ஆசிய - ஆப்ரிக்க - ஆஸ்திரேலிய நாடுகளை ஓரம் கட்டி விடுகிறார்கள்!

விஷுவல் அற்புதங்களுக்குக் குறைவில்லை. அந்தப் பிரம்மாண்ட வெளிகிரக விண்கலகத்தின் பெரும் நிழல் நியூயார்க், வாஷிங்டன், லாஸ் ஏஞ்ஜெல்ஸ் நகரங்களின் மீது கிரகணமாகப் படிவதைக் காட்டும் உத்திக்குப் பாராட்டு. ஆனால் விண்கலத்தோடு மோதும் காட்சி விடியோகேமைப் பார்க்கும் உணர்வையே ஏற்படுத்துகிறது.

திக்திக் காட்சிகளும் உண்டு. உலகை அழிக்க வந்துள்ள வேற்றுகிரகவாசிகளை எப்படிக் கொல்வது? இதற்காகப் பலப்பல ஆண்டுகளுக்கு முன் 'இறந்துவிட்ட' வெளிகிரக உயிரினம் ஒன்றின் இதயப் பகுதியை விஞ்ஞானிகள் கீறிப் பார்க்க, அதன் உட்பகுதியிலிருந்து ஒரு சின்ன உயிரினம் வெளிவந்து வெகுவேகமாக டினோசர் வடிவத்துக்கு வளர்ந்து, விஞ்ஞானிகளை வதைக்கும் காட்சி குறிப்பிடத்தக்கது.

பின்னணி இசையைப் பாராட்டாவிட்டால் பாவம்.

முக்கிய பாத்திரங்களெல்லோருமே சிராக நடிக்கிறார்கள். முதல் ரீலிலிருந்தே தொடங்கும் அத்தனை கண்டங்களிலிருந்தும் தப்பித்து இறுதிவரை உயிரோடு இருக்கிறார்கள்!

பிரம்மாண்டத்தை அழுத்தமாக உணர வைக்கும் உத்திகளும், குறைவான வசனமும் படத்தின் பெரும் பலங்கள்.

— குல்லூ

பாதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பாதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

# தீபாவளி திருநாளின்
# விசேஷ சேமிப்பு திட்டம்

## சில்வர் டெபாசிட் திட்டம்



டெபாசிட்டுகள் வரவேற்கப் படுகின்றன

**EXPRESS**
FINANCIAL EXCHANGE LIMITED

பாங்க் ஆப் அமெரிக்காவின் சார்பு நிறுவனம்

• வாகனங்களுக்கான கடன்கள் • பங்குகள் மீதான கடன்கள்

அங்கீகரிக்கப்பட்ட டீலர் அமெரிக்கன் எக்ஸ்பிரஸ் டிராவலர்ஸ் செக்குகள்

பதிவு அலுவலகம்: நெ. 9, அட்லேப் டவர், தெற்கு போக் சாலை, சென்னை-600 017.
போன்: 4340325, 4340329, 4341403, ஃபாக்ஸ்: 4341518.

• சென்னை • ஹைதராபாத் • விஜயவாடா • விசாகப்பட்டினம் • பெங்களூர் • திருச்சி
• கும்பகோணம் • கோயம்புத்தூர் • பாண்டிச்சேரி

1996 மார்ச் 4ந் தேதி எகனாமிக் டைம்ஸில் வெளியான சட்ட பூர்வ விளம்பரத்தைத் தொடர்ந்து இந்த விளம்பரம் வெளியிடுகிறது.

Helios & Mathison

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka